மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

மாலை—21 




உரையாசிரியர்
ஆங்கீரஸ S வேங்கடேச சர்மா
சங்கரனடிமை

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்
# மூவர் தமிழ் மாலை

## (சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை—21

உரையாசிரியர் :
சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,
சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி,
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)





பிரசுரம் :
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை - 600 033.

 7-8-1987 [விலை ரூ. 4-00





சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி






| திருஞான சம்பந்தர் | திருநாவுக் கரசர் | சுந்தர மூர்த்திகள் | மாணிக்க வாசகர் |
|---|---|---|---|

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் — முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.



5-2

# திருஞானசம்பந்தர்






பொன்னுர் மதில்சூழ் புகலிக்கரசு,
சிவன் இவனென்று அந்நாள் குதலைத்
திருவாய்மொழிகள் அருளிச்செய்த
என்ஐயன், சண்பையர் காவலன்,
எண்தடந்தோளன் கருணைபெற்ற
தார்மண்டலமணி
திருஞானசம்பந்தர்

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்



# ஸமர்ப்பணம்

## ஓம் சிதிகண்டாய நம:

சிவபிரானின் அருச்சனைக்குரிய சிவாஷ்டோத்தரசத நாமாவளி என்னும் 108 திருநாமங்களில் 21வது திருநாமம் சிதிகண்ட: (சிதிகண்டன்) என்பதாகும். இந்தத் திருநாமம் வேதத்தில் உள்ளதாகும். ஸ்ரீருத்ரத்தில் நமோ நீலக்ரீவாய என் பதனையடுத்து சிதிகண்டாய ச என்று வருகிறது. இத்திரு நாமத்துக்கு உரையெழுதிய ஸாயனர் விஷம் இருக்கும் இடம் தவிர மீதிபாகம் வெளுத்த கழுத்தையுடையவர் என்று கூறி யுள்ளார். ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதியாக இருந்த அபிநவ சங்கராசாரியார் தமது உரையில் காளகூட விஷத்தை உட்கொள்ளுவதற்கு முன் வெண்மையான நிறத்தையுடைய கழுத்துடன் இருந்தவர் என்று கூறி, மேலும் ஸ்படிக நிறம் போன்ற வெண்மையான கழுத்து கருநிறம் அடைவதையும் பொருட்படுத்தாது விஷபானம் செய்தது இறைவருடைய ஸர்வலோக தயாளுத்வத்தைப் பிரகாசப்படுத்தியது என்றும் விளக்கியருளினர்.

இறைவரது பரம கருணையைப் புலப்படுத்தும் இந்த அரிய ஓம் சிதிகண்டாய நம: என்ற 21வது திருமந்திரத்தால் அருச்சனை செய்து இந்த 21வது ஞானத்தமிழ் மாலையினை இறைவரது திருவடிகளில் ஸமர்ப்பிக்கும் சிவபுண்ணியப் பேற்றினை அடைகின்றேன்.

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
உரையாசிரியர்

சிவம்

5-25

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

இருந்தண் புகலிகோ லக்கா எழில்ஆ வடுதுறைசீர்
பொருந்தும் அரத்துறை போனகம் தாளம்நன் பொன்சிவிகை
அருந்திட ஒத்தமுத் தீச்செய ஏற அரனளித்த
பெருந்தகை சீரினை எம்பர மோநின்று பேசுவதே

திருச்சிற்றம்பலம்.

—ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி—40
(நம்பியாண்டார்நம்பிகளருளியது, 11-ம் திருமுறை)

புகலி என்னுமொரு பெயருடைய சீகாழியில் அம்மைதந்த திருமுலைப்பாலாகிய போனகத்தை அருந்திடவும், திருக்கோலக்காவில் தாளத்தை ஒத்தவும், திருவாவடுதுறையில் பொன்னை வேள்வி செய்யவும், திருநெல்வாயில் அரத்துறையில் சிவிகையை ஏறுதற்கும் சிவபெருமான் திருஞானசம்பந்தருக்கு அளித்தருளினர். இறைவரிடமிருந்து இத்தகைய திருவருளைப் பெற்ற பெருந்தகையாகிய திருஞானசம்பந்தரின் பெருமையைப்பேசுவதும் எம்மால் ஆகும் தன்மைத்தோ? இவ்வாறு பொல்லாப்பிள்ளையார் திருவருள் பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் கூறுவார்களேயானால் நம்போலியர் எங்ஙனம் அப்பெருந்தகையின் சீரினைப் பேசும் திறனுடையராவோம்? இருப்பினும் ஒரளவு அவனருளே கண்ணாகக் கண்டு திருஞானசம்பந்தரின் திருப்பதிகங்கட்கு உரை காண்பது என்பதைக் காரணமாகக் கொண்டு அப்பெருமானைக் கும்பிட்டு வருகின்றோம்.

இது காறும் 20 தமிழ் மாலைகள் வெளியிட்டுள்ளோம். இப்பொழுது இந்த 21-வது தமிழ் மாலையில் பிள்ளையார் தம் ஐந்தாவது தலயாத்திரையில் தொடர்ந்து தரிசித்துப் பாடிய திருத்தலங்களில் திருவியலூர், திருந்துதேவன்குடி, திருஇன்னம்பர், திருவடகுரங்காடுதுறை, திருப்பழனம், திருவையாறு என்ற ஆறு தலப்பதிகங்களை வெளியிடுகின்றோம். திருவையாற்றுக்குரியதாக ஐந்து திருப்பதிகங்கள் தலமுறைப் பதிப்புகளில் காணப்படினும் "புலனைந்தும் பொறி கலங்கி" எனத்தொடங்கும் திருப்பதிகமும் "கோடல் கோங்கங் குளிர் கூவிளமாலை" எனத்தொடங்கும் திருப்பதிகமும் ஆகிய இரண்டு மட்டுமே இந்த யாத்திரையில் முதன்முறையாகத் தரிசித்தபோது பாடியவை என்றும் மற்ற மூன்றும் இரண்டாவது முறை திருவையாற்றைத் தரிசித்தபோது பாடியவை என்றும் சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியாரவர்களும் மற்றும் அறிஞர்களும் கருதுகின்றார்கள். தலயாத்திரை முறையில் பதிகங்களை வெளியிடுதலால் நாமும் அங்ஙனமே கொண்டு இந்த இரண்டு பதிகங்களை மட்டுமே இந்தத் தமிழ் மாலையில் பிரசுரித்துள்ளோம். ஏனைய மூன்று பதிகங்களும் பின்னர் இரண்டாவது முறையாகத் தரிசித்துப் பாடியனவாக உரியகாலத்தில் பிரசுரிக்கப்படும்.

இதுவரையில் நமக்கு உதவியது போலவே இந்த மாலைக்கும் தேவையான விளக்கக் குறிப்புகள் தந்து உதவியவர்கள் இராணிப்பேட்டை புலவர் திரு.பி.மா சோமசுந்தரனார் அவர்களும், சென்னைப் புலவர் திரு க. இரெ. நாகராசனார் அவர்களுமாவர். அவர்கட்கு எமது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

மற்றும் 20, 21, 22 ஆகிய மூன்று தமிழ் மாலைகளுக்கான மொத்த செலவினையும் நன்கொடையாக உதவியவர் செந்தமிழ்ச் செல்வர், அறப்பெருஞ்செம்மல், கல்விக்காவலர், புலவர், டாக்டர் ம. வே. ஜயராமன் M. A. அவர்களாவர். கர்னாடக மாநிலத்தின் தலைநகரான பெங்களூரில் வேங்கடேசா கல்விக்

கழகம் நிறுவி அதன் மூலம் கல்விப்பணிபுரியும் வள்ளல் திரு. ம. வே. ஜயராமன் அவர்களைப் பற்றிய சில செய்திகளை முன் 20ம் தமிழ் மாலையில் கொடுத்துள்ளோம். அவர்களது உருவப்படத்தினையும் சென்ற தமிழ்மாலையில் பிரசுரித்தோம். இந்த 21வது மாலையிலும் பிரசுரித்துள்ளோம். அடுத்து வரும் 22வது மாலையிலும் பிரசுரித்து எமது நன்றியினைப் புலப்படுத்துவோம் இவ்வள்ளலை நமக்கு அறிமுகப்படுத்தி இப்பேருதவி கிடைக்கச் செய்த பெங்களூர் டாக்டர் A. N. ஆறுமுகம், M D. அவர்களுக்கும் மறவாது நன்றி செலுத்துகின்றோம். என்னை? செய்ந்நன்றி மறத்தல் என்பது உய்தியில் குற்றம் என்று அற நூல்கள் பறைசாற்றுகின்றனவன்றோ? இதுவரையில் வெளியான எமது தமிழ்மாலைகளைப் பெற்றுப் போற்றிப் பயன்படுத்தியது போலவே இந்த 21வது மாலையினையும் ஆதரிக்குமாறு வாசக நேயர்களை வேண்டிக் கொள்கின்றோம். மிக எளியோமாகிய எம்மையும் இப்பெரும்பணியில் ஈடுபடுத்திய திருவருளை வியந்து போற்றுகின்றோம்.

''எல்லாம் எமையாளும் ஈசன் செயல்''



திருவையாறு-ராஜகோபுரம்

# இப்பதிப்பில் வந்துள்ள தலங்களின் விசேடங்கள்

## 1. திருவியலூர்

காவிரி வடகரையில் 43 வது தலமான திருவியலூர் இப்போது திருவிசநல்லூர், திருவிசலூர், பண்டாரவாடைத் திருவிசநல்லூர் என்றெல்லாம் வழங்கப்படுகிறது. இத்தலத்தில் சடாயு, பிரமன் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றனர் என்று தலவரலாறு கூறுகிறது. மற்றும் கேரளநாட்டு மன்னன் மகன் ஒருவன் இத்தலத்துக்கு வந்து காவிரியில் நீராடித் தனது தீயொழுக்கத்தால் வந்த பாவந்தீரப் பெற்ருன் என்றும் குலதர்மத்தை விட்டு இழிதொழில் மேற்கொண்ட பாவத்தினின்றும் ஓர் அந்தணன் வழிபட்டு நீங்கினுன் என்றும் கூறப்படுகிறது. வடநாட்டிலிருந்து வந்த உய்யவந்த தேவ நாயனுர் என்பவர் இத்தலத்துக்கு வந்து தங்கியிருந்து திருவுந்தியார் என்ற சித்தாந்த சாத்திரநூலை இயற்றினுர் என்றும் கூறப்படுகிறது.

மற்றும் இவ்வூரில் ஸ்ரீதர வேங்கடேச ஐயாவாள் என்ற பெரியார் அவதரித்து சிவபக்தி மிக்கவராய்த் திகழ்ந்து ஆக்யாஷஷ்டி என்ற அறுபது வடமொழி சுலோகங்கள் கொண்ட ஒரு நூலை இயற்றி அதன் மூலம் சிவநாமத்தின் பெருமையை உணர்த்தினுர். மற்றும் சிவபக்தி கல்பலதிகா, ஆர்த்திஹர ஸ்தோத்ரம் போன்ற நூல்களையும் இயற்றி சிவபக்தியைப் பரப்பினுர். சிவபெருமான் திருவருளால் தமது வீட்டுக் கிணற்றில் கங்கை வரும்படிச் செய்தார். கார்த்திகை மாத அமாவாசையில் இது பெரும் விழாவாக இவ்வூரில் உள்ள ஸ்ரீதர வேங்கடேச ஐயாவாள் மடத்தில் கொண்டாடப்பட்டு வருகிறது. அந்தநாளில் எத்தனைபேர் வந்தாலும்

நீராடுவதற்கு வேண்டிய தண்ணீரை இக்கிணறு சிறிதும் வற்ருது கொடுத்துவரும் விசேடம் இக்காலத்திலும் கண் கூடாகக் காணலாம்.

தஞ்சை அரண்மனையின் பரிபாலனத்தில் உள்ள இக் கோயிலில் நல்ல நிலையில் பூசைகள் காலந்தவருது சிறப்பாக நடைபெற்று வருகின்றன. கோயில் பூசகர் சிவத்திரு T.N பசுபதி குருக்கள் என்ற ஆதிசைவப் பெரியார் மிகவும் ஆர் வத்துடன் இறைவரைப் பூசித்துவருவது போற்றுதற்குரியது இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் மட்டும் ஒரு பதிகம் பாடியுள்ளார்.

கும்பகோணத்திலிருந்து காவிரியின் வடகரை வழியாக மயிலாடுதுறைக்குச் செல்லும் பேருந்து வழியில் கும்ப கோணத்துக்குக் கிழக்கே சுமார் 7 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது இத்தலம். பள்ளிக்கூடம் பேருந்து நிற்குமிடம் (School Bus Stop) எனக்கேட்டு இறங்கி வடக்கே சுமார் 1 கிலோமீட்டர் நடந்து சென்ருல் திருவியலூர் கோயிலையடைய லாம். கும்பகோணத்திலிருந்து 2, 26, 38 எண் நகரப்பேருந்து களும் (Town Bus) இவ்வழியில் செல்கின்றன. திருவிடை மருதூர் இரயில்வே நிலயத்தினின்றும் வடமேற்கே வேப்பத் தூர் மார்க்கமாக சுமார் 7 கிலோ மீட்டர் சென்ருலும் இத் தலத்தை அடையலாம். இறைவர் திருப்பெயர்—யோகானந் தேசுவரர், சிவயோகீச்வரர், வில்வாரண்யேசுவரர். இறைவி யார் திருப்பெயர்—சாந்தநாயகி, ஸௌந்தரநாயகி. தீர்த்தம்—சடாயு தீர்த்தம். தலமரம்—வில்வம்.

## 2. திருந்துதேவன்குடி

காவிரிவடகரை 42வது தலமான திருந்துதேவன்குடி தற் காலம் நண்டாங்கோயில் என நண்டு சிவபெருமானை இங்குப் பூசித்த ஐதிகம் பற்றி வழங்கப்படுகிறது. திருந்துதேவன் குடி என்ற ஊர் தற்போது இல்லை. இவ்விடத்தில் மக்கள்

குடியிருப்பு ஏதுமின்றிக் கோயில் மட்டும் வயல்களுக்கு மத்தியில் உள்ளது. கோயில் மிகவும் இடிந்துபோய் கோபுரவாயில் கதவு கூட இல்லாமல் உள்ளது. சுவாமி அம்பாள் மூலஸ்தானக் கருவறைகளும் விமானங்கள் இடிந்துபோயும் கதவுகள் இன்றியும் உள்ளன. (1986 மே மாதம் அடியவன் தரிசித்த போது இருந்தநிலை) திருநீறு, திருவுருத்திராக்கம், திருச்சடைமுடி ஆகிய இறைவரது வேடங்களின் மஹிமையைத் திருஞானசம்பந்தர் பாடிய இத்தலத்தின் இன்றைய நிலையைக் கண்டு ஒவ்வொரு சைவரும் கண்ணீர் உகுக்க வேண்டும். இக்கோயிலைப் புதுப்பித்துக் குடமுழுக்குச் செய்யும் புண்ணியத்தை எந்த சைவப்பிரபுவுக்குத் திருவருள் கூட்டுவிக்குமோ யாமறியோம். நாம் சென்ற 1986 மே மாதம் இத்தலத்தைத் தரிசித்தபோது ஒருவேளை பூசை கூட இல்லை என்று கேள்விப்பட்டு மனம் மிகவருந்தி இறைவரைப் பிரார்த்தித்தோம். தற்சமயம் ஒருவேளை பூசை நடைபெற்று வருகிறது என்றும் திருப்பனந்தாள் காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் இந்தப்பூஜைக்கு உதவி செய்துவருகிறார் என்றும் அறிகிறோம். யாமும் மாதம் தவறாது ஒரு சிறுதொகை அனுப்பி வருகிறோம். மேலும் உதவ விரும்புபவர் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் அதிபருக்கு விவரம் தெரிவிக்கலாம்.

இத்தலத்தில் இந்திரனும் நண்டும் வழிபட்டுப் பேறுபெற்றதாகத் தலவரலாறு கூறுகிறது. நோயால் வருந்திய ஒரு அரசனுக்கு இறைவர் மருத்துவனாக வந்து பிணி தீர்த்தார் என்றும், பிறகு அரசனை அழைத்து வந்து மண் மேட்டை வெட்டச் சொன்னார் என்றும், வெட்டிய இடத்திலிருந்து சிவலிங்கம் ஒன்று வெளிப்பட்டது என்றும், அம்மன்சிலை கிடைக்கவில்லை என்றும், அதனால் புதியதாக அம்மன் திருவுருவம் செய்து அருமருந்தம்மை எனப்பெயர் சூட்டினான் என்றும், பின்பொருசமயம் பழைய அம்மன் சிலையும் கிடைக்கப் பெற்றது என்றும் அதனால் தான் இக்கோயிலில் இரண்டு அம்மன் சந்நிதிகள் உள்ளன என்றும் கர்ணபரம்பரைச் செய்தி கூறுகிறது. நண்டு பூசித்த ஐதிகம் ஒரு தூணில் சிற்பமாகப்

பொறிக்கப்பட்டு இன்றும் காணக்கூடிய நிலையில் உள்ளது. சுவாமியின் திருமுடியிலும் நண்டு உருவம் காணப்படுவதாகக் கூறப்படுகிறது. ஆயினும் நாம் தரிசிக்கச் சென்ற சமயம் இச் செய்தி அறியாமையால் இறைவர் திருமுடியை உற்று நோக்கிப் பார்க்கவில்லை.

இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் திருப்பதிகம் ஒன்று மட்டுமே உள்ளது முன்கூறிய 43வது தலமான திருவியலூர்க் கோயிலிலிருந்து வடக்கே செல்லும் மண்சாலையில் சுமார் 1கிலோ மீட்டர் நடந்து சென்றுல் இக்கோயிலை அடையலாம். கோயிலைச் சுற்றி மூன்று பக்கங்களிலும் நீர் அகழி உள்ளது. இறைவர் திருப்பெயர்—தேவதேவேசர், கர்க்கடகேசுவரர். இறைவியார் பெயர்—அருமருந்தம்மை. தீர்த்தம்—பங்கய தீர்த்தம் (அகழி). தலமரம்—வில்வம்.

## 3. திரு இன்னம்பர்

காவிரியின் வடகரையிலமைந்த 45 வது தலமான திரு இன்னம்பர், இப்பொழுது இன்னம்பூர் என வழங்கப்படுகிறது. இத்தலத்தில் சூரியன், அகத்தியர், ஐராவதம் முதலியோர் இறைவரைப்பூசித்து நற்பேறு பெற்றனர் என்று கூறப்படுகிறது. இனன் (சூரியன்) நம்பு ஊர் என்பது இன்னம்பர் என ஆயிற்று என்றும் கூறுவர். துருக்கர் படையெடுப்புக் கஞ்சி சுமார் 40 ஆண்டுகள் இக்கோயில் பூசையின்றி இருந்ததாகக் கல்வெட்டொன்று கூறுகிறது.

திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் பதிகம் நான்குமாக ஐந்து திருப்பதிகங்கள் பெற்றது இத்தலம். இங்கு அம்மன் சந்நிதிகள் இரண்டு இருக்கின்றன. கும்பகோணத்துக்கு 3 கி மீ மேற்கேயுள்ள புளியஞ்சேரி என்னுமிடத்திற்கு வடக்கே 2கி.மீ தொலைவிலுள்ள இத்தலத்துக்கு கும்பகோணத்திலிருந்து 6 எண் உள்ள நகரப் பேருந்து (Town Bus) வருகிறது.

இறைவர்திருப்பெயர்—தான்தோன்றியீசர், எழுத்தறிந்தநாதர்.
இறைவிதிருப்பெயர்—ஸௌந்தரநாயகி, பூங்கொம்புநாயகி.
தீர்த்தம்—ஐராவததீர்த்தம்; தலவிருட்சம்—சண்பகமரம்.

## 4. திருவடகுரங்காடுதுறை

வாலி என்ற குரங்கரசனால் வழிபடப்பட்டுக் காவிரியின் வடகரையில் உள்ளதால் இத்தலம் திருவடகுரங்காடுதுறை எனப் பெயர்பெற்றது. காவிரி வடகரையில் 49-வது தல மாகும். தஞ்சை அரண்மனையாரின் பரிபாலனத்துக்கு உட் பட்டதலம்.

ஒரு வைசியகுலப்பெண் நிறைகருவுற்ற நிலையில் தன் கணவனோடு கால்நடையாகத் தன் தாய்வீடு நோக்கி நடந்து வந்தவள் வெயிலின் கொடுமைக்கு ஆற்றாது இக்கோயில் திரு முற்றத்தில் ஒரு மரநிழலில் தங்கினாள். அவளது நீர் வேட்கை யைத் தணிக்கக் கணவன் நீர் கொண்டு வரச்சென்றான். கணவன் திரும்பிவர நேரமாக அப்பெண் தாகத்தால் மிக வருந்தி இறைவரைத் தியானித்து வேண்டினாள். அருகில் இருந்த தென்னைமரம் வளைந்து கொடுக்க அதனின்றும் சில இளநீர்க் காய்களைப் பறித்துக் கொண்டாள். ஆயினும் அவைகளைச் சீவி இளநீர் குடிக்க வழியின்மையால் வருந் தினாள். அவளது வருத்தத்தைத் தீர்க்க இறைவர் மரமேறி யாகவந்து இளநீர்க் காய்களைச் சீவித் தந்தான். வைசியப் பெண்ணும் இளநீர் பருகித் தன் நீர் வேட்கையினின்றும் நீங்கி னாள். தென்னையும் முன்போல நிமிர்ந்து விட்டது. பின்னர் நீர் கொண்டு வந்த கணவனிடம் இந்தச் செய்தியை அவள் கூற அவன் அதை நம்பவில்லை. அப்பெண் இறைவரைத் துதிக்க இறைவரருளால் மீண்டும் தென்னைமரம் வளைந்ததுடன் இறைவரும் காட்சியளித்தார். இங்ஙனம் தலவரலாறு மகா மண்டபத்தில் சிற்பமாக உள்ளது. இத்தலத்துக்குத் திரு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று மட்டும் உள்ளது.

கும்பகோணத்திலிருந்து திருவையாறு செல்லும் பேருந்து சாலையில் கும்பகோணத்துக்கு மேற்கே சுமார் 20 கி.மீ தொலை விலும், திருவையாற்றுக்குக் கிழக்கே சுமார் 12 கி.மீ தொலை விலும் இத்தலம் உள்ளது. இவ்வழியில் பேருந்துகளும் கும்பகோணத்திலிருந்து 42 எண் நகரப்பேருந்துகளும் செல் கின்றன.

இறைவர் திருப்பெயர்—குலைவணங்குநாதர், அழகுசடை முடிநாதர். இறைவி திருப்பெயர்—அழகுசடைமுடியாள். தீர்த்தம்-காவிரியாறு; தலவிருட்சம்—சந்தனமரம்.

## 5. திருப்பழனம்

காவிரி வடகரை 50வது தலமான திருப்பழனம் கௌசிக முனிவர் தவமியற்றி வழிபட்டதலமென்று கூறப்படுகிறது. இதற்கு வடக்கே 2 கி.மீ தொலைவில் உள்ள திங்களூரில் வாழ்ந்த அப்பூதி அடிகளாரது மூத்தகுமாரன் பாம்பு கடித்து இறந்தபோது திருநாவுக்கரசு சுவாமிகளால் "ஒன்று கொலாம்" என்று பதிகம் பாடி உயிர் பிழைக்கச் செய்த தலமும் இதுவேயாகும். திருவையாற்றுச் சப்தஸ்தானம் எனப்படும் ஏழுதலங்களில் இரண்டாவதான இத்தலம் கும்ப கோணத்திலிருந்து திருவையாறு செல்லும் பேருந்து வழியில் கும்பகோணத்துக்கு மேற்கே சுமார் 29 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும் திருநாவுக்கரசர் பதிகம் ஐந்தும் ஆக ஆறு பதிகங்கள் உள்ளன. திருநாவுக்கரசரின் பொதுப்பதிகமான விடந்தீர்த்த பதிகமும் இத்தலத்தில் பாடப்பட்டதேயாகும். இறைவர் பெயர் — ஆபத்ஸஹாயர்; இறைவி பெயர் — பெரிய நாயகி; தீர்த்தம்—மங்கள தீர்த்தம்; தலவிருட்சம் — வில்வம்.

## 6. திருவையாறு

காவிரி வடகரைத் தலங்களில் 51 வது தலமான திரு வையாறு பஞ்சநதம், பூலோககயிலாயம் என்வும் வழங்கப் படும். சூரியபுஷ்கரணி, சந்திரபுஷ்கரணி, கங்கை, பாலாறு, நந்திவாய்நுரை, நந்தி தீர்த்தம் என்னும் ஐந்து தெய்விக ஆறுகள் தம்முட்கலப்பதால் திருவையாறு அல்லது பஞ்சநதம் எனப் பெயர் பெற்றது என்று கூறப்படுகிறது. தஞ்சையி லிருந்து திருவையாறு வரும் வழியில் வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டியாறு, காவிரியாறு என்னும் ஐந்து ஆறுகள் ஓடுவதாலும் ஐயாறு எனப் பெயர் பெற்றதாகச் சிலர் கூறுவர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கயிலைக்குச் சென்று அங்கு இறைவனும் இறைவியுமாக இருக்கும் காட்சியைக் காண விரும்பினார். அதனால் வடநாட்டு யாத்திரை செய்து, இமயமலை மீதேறிப் பல இன்னல்களுடன் நடந்து கடைசியில் உடல் கால்கள் கைகள் எல்லாம் தேய்ந்து அசைய முடியாத நிலையில் ஓரிடத்தில் தங்கிவிட்டார். அந்நிலையில் இறைவன் ஒரு முனிவராகத் தோன்றி ஒரு பொய்கையைக் காட்டி "இதில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்து கயிலைக் காட்சியைக் காண்பாய்" எனப் பணித்தவண்ணம் திருநாவுக்கரசரும் இறைவர் காட்டிய பொய்கையில் மூழ்கித் திருவையாற்றில் வடமேற்கே உள்ள குளத்தில் எழுந்து கரையேறித் திருக்கோயிலை நோக்கிச் செல்லும் வழியில் சராசரங்கள் எல்லாம் ஆணும் பெண்ணுமாய் இணைந்து நின்று காட்சியளிக்கக் கண்டார். அவற்றைச் சிவமும் சத்தியுமாக வழிபட்டுத் திருக்கோயிலையடைந்தார். திருக்கோயில் கயிலாயமாக் காட்சியளிக்க மரகதக்கொடி படர்ந்த பவளமலை போல உமாதேவியாரோடு வீற்றிருந்த சிவபிரானைக் கண்டு தரிசித்து ஆனந்தக் கண்ணீர் பெருக உச்சிமேற்கரங்குவித்து ஆடிப்பாடினார். பிரம விஷ்ணுவாதி தேவர்கள் இறைவர் திருமுன்பு கைகுவித்து நின்று துதிக்கும் காட்சியைக் கண்டார். பிறகு கயிலாயக் காட்சி திருவையாறாக மாறியது. இக்காரணத்தால் இத்தலம் பூலோக கயிலாயம் என வழங்கப்படுகிறது. திருநாவுக்கரசருக்கு இறைவர் கயிலைக் காட்சி தந்தருளிய ஐதிகம் ஆடி அமாவாசையன்று விழாவாக நடத்தப்பட்டுவருகின்றது.

இத்தலத்தில் இந்திரன் சூரியன் வருணன் வாலி திருமகள் அகத்தியர் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றனர். இத்திருக்கோயில் ஆதிசைவர் ஒருவர் காசிக்குச் சென்று குறிப்பிட்ட காலத்தில் திரும்பிவராமையால் பூசைமுறை தவறியது. அப்பொழுது ஐயாறப்பர் அந்த ஆதிசைவரின் வேடந்தாங்கித் தன்னையே பூசித்துக் கொண்டார். இதனைத் திருவாசகம் "ஐயாறதனிற் சைவனாகியும்" எனக்குறிப்பிடுகிறது. இது ஆத்மபூஜை எனப்படும். இந்த ஐதிகம் இங்குச் சித்திரைப் பெரும் திருவிழாவில் ஐந்தாம் நாளில் நிகழ்த்தப்படுகிறது

சுசரிதன் என்ற அந்தணச் சிறுவன் ஐயாறப்பரை நாள் தோறும் வழிபட்டு வந்தான். இளம்பருவத்திலேயே அவன் ஆயுள் முடிவடையும் விதி இருந்தமையால் குறிப்பிட்ட காலத்தில் இயமன் அச்சிறுவனின் உயிரைக் கவரவந்தான். இறைவரைத் தவருது வழிபட்ட தெய்வபலத்தால் இதையறிந்த சுசரிதன் கோயிலை நோக்கி ஓடினுன். தெற்கு வாயிலில் ஐயாறப்பர் சோதி வடிவாகத் தோன்றி இயமனை விரட்டி அவ்வந்தணச் சிறுவனை ஆட்கொண்டார். தெற்கு வாயிலில் ஆட்கொண்டார் என்ற திருநாமத்தோடு எழுந்தருளியுள்ளார். அவருடைய சந்நிதிக்கு முன்னே மக்கள் குங்குலியம் தூபம் இட்டு வழிபட்டு வருகின்றனர். ஆட்கொண்டார் சந்நிதிக்கு தென் மேற்கு மூலையில் இருப்பவர் ஓலமிட்டபிள்ளையார் எனப்படுபவர்.

சுந்தரமூர்த்தி நாயனுரும் சேரமான்பெருமாள் நாயனுரும் காவிரி தெற்குக் கரையில் உள்ள தலமான திருக்கண்டியூரை வணங்கியபோது எதிரேயுள்ள திருவையாற்றை வணங்க விரும்பினர். இடையிலேயிருந்த காவிரி நதியில் வெள்ளப் பெருக்கு மிகுதியாக இருந்தமையால் அக்கரையிலிருந்தபடியே சுந்தரமூர்த்தி சுவாமிகள் ''ஐயாறுடைய அடிகளோ'' என்று பாடியவளவில் இறைவர் உலகமெலாம் கேட்கும்படி ''ஓலம்'' என்று மொழிகொடுத்து மேற்குப்பகுதி வெள்ளத்தைப் பளிங்குபோல் நிறுத்தி வைத்தும் கிழக்குப் பகுதி வெள்ளத்தை வடிய வைத்தும் நடுவே வழிகாட்டி அருளினர். சுந்தரர் பெருமானும் சேரமான் பெருமாளும் காவிரியைக் கடந்து திருவையாற்றை வழிபட்டு மீண்டனர் என்று பெரியபுராணங் கூறுகிறது.

சிலாதமுனிவருக்குத் திருமகனுய் அவதரித்து திருநந்திதேவர் சுயசாதேவியை மணந்து கொண்டு ஐயாறப்பரைப் பூசித்துச் சிவசாரூப்யம் பெற்ருர் என்று தலவரலாறு கூறுகிறது. இதனையுட்கொண்டு சேக்கிழார் பெருமான் ''நந்தி அருள் பெற்ற நன்னகர்'' என்று இத்தலத்தைப் போற்றியுள்ளார். நந்திதேவர் திருமணத் திருவிழா பங்குனி மாதத்தில்

நடைபெறுகிறது. அப்பொழுது அம்மையப்பர் ஒரு தனி வெட்டிவேர் பல்லக்கிலும் நந்திதேவர் ஒரு வெட்டிவேர் பல்லக்கிலும் திருமழபாடிக்கு எழுந்தருளி அங்கே நந்திதேவருக்குத் திருமணத்தை முடித்துக் கொண்டு அன்று இரவே ஐயாற்றுக்குத் திரும்பஎழுந்தருளுவர்.

இங்குச் சித்திரை மாதத்தில் பிரம்மோற்சவம் என்ற பெருந்திருவிழா நடை பெறுகிறது. இந்தவிழாவின் இறுதியில் ஐயாறப்பர் தேவியுடன் ஒரு கண்ணாடிப் பல்லக்கில் திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் ஆகிய ஊர்களுக்கு எழுந்தருள அந்தந்த ஊர்களின் இறைவரும் தனித்தனிப்பல்லக்குகளில் எதிர்கொண்டு அழைத்து உடன் தொடர மறுநாள் ஐயாற்றுக்கு எழுந்தருளுவர். இந்த விழாவில் திருநந்திதேவரும் சுயசா தேவியுடன் எழுந்தருளுவர். இதுவே ஸப்தஸ்தானத்திருவிழா என்னும் ஏழூர் விழாவாகும். இலட்சக்கணக்கான மக்கள் தரிசிக்கும் அரிய விழா இதுவாகும்.

இத்தகு சிறப்புகள் பெற்ற இத்தலம் சம்பந்தர் பதிகம் 5, அப்பர் பதிகம் 12, சுந்தரர் பதிகம் 1, ஆக மூவர் திருப்பதிகங்கள் மொத்தம் 18 பெற்ற பெருமையுடையதாகும். திருத்தருமபுர ஆதீனத்தின் பரிபாலனத்தில் இருந்து வரும் ஐந்து பிராகாரங்களுடன் கூடிய அழகிய பெருங்கோயில். தஞ்சாவூருக்கு வடக்கே 12 கி. மீ. தொலைவிலும் கும்பகோணத்துக்கு மேற்கே 32 கி. மீ. தொலைவிலும் இத்தலம் உள்ளது. தஞ்சாவூர், கும்பகோணம், கல்லணை முதலிய இடங்களிலிருந்து பேருந்துகள் வருகின்றன. இறைவர் பெயர்—ஐயாறப்பர், பஞ்சநதேசுவரர், செம்பொற்சோதிநாதர், பிரணதார்த்திஹரேசுவரர் முதலியன. இறைவி பெயர்-அறம்வளர்த்தநாயகி (தர்மஸம்வர்த்தனி); தீர்த்தம் —சூரியபுஷ்கரிணி, காவிரி; தலவிருட்சம்-வில்வம்.

சிவம்



செந்தமிழ்ச்செல்வர், கல்விக்காவலர்
அறப்பெருஞ்செம்மல்

டாக்டர், புலவர் ம. வே. ஐயராமன், M.A.,
அவர்கள்

(நிறுவனர்—தாளாளர்
ஸ்ரீ வேங்கடேசா கல்விக் கழகம், பெங்களூர்)

''பால்புரை பிறைநுதற் பொலிந்தசென்னி
நீலமணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே''

—ஔவையார்

சிவபிரானின் திருவேடங்களை அணிந்தவர்க்கு நடுக்கம் என்பது இல்லை. மேலும் அவர்க்குத் தூயதோற்றத்தை அளித்துப் பிரகாசமுடையவர்களாக ஆக்குந் தன்மையுடையனவுமாகும்.

துளக்கம்:—"துளக்கமே பயம் நடுக்கம்" என்பது அரும் பொருள் விளக்க நிகண்டு. எனவே சிவசின்னங்கள் அணிந்தவர்க்கு "அஞ்சுவது ஒன்றுமில்லை, இனி அஞ்சவருவது மில்லை" என்பதாம்.

செருமரு தண்டுவர்த் தேரமண் ஆதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் உரைகொளேல்
திருமரு வும்பொய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன அடிகள்வே டங்களே. 10

10. மருதமரத்து இலைகளால் உண்டாக்கப் பெற்ற துவர்நிற உடைகளைப் போர்த்துக்கொள்ளும் பௌத்தர்களும், அறிவில்லாதவர்களாகிய சமணர்களும் அருகில் நெருங்கப்படக்கூடாத தோற்றமுடைய இழிந்தவர்களாகிய அவர்களது வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாதீர்கள். அழகு பொருந்திய பொய்கை சூழ்ந்த திருந்துதேவன்குடியில் எழுந்தருளியிருக்கும் முழுமுதல்வனாகிய சிவபிரானின் திருவேடங்களே கிடைத்தற்கரிய தேவாமிர்தம் ஆகும். (அவற்றையே தரிசித்தும் தரித்தும் அருள் பெறுவீராக என்று உபதேசித்ததாகக் கொள்க)

செருமருதண்துவர் - செரு என்னும் சொல் போர் என்னும் பொருளையும் தரும். எனவே போர்க்களத்தை மருவிய குருதி போன்ற சிவந்த நிறத்தாடை உடையவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.

உருமருவப்படாத்தொழும்பர் — கொல்லாமை மறைந்து உறையும் நெறியினராகையால் தமது பழிச்செயலுக்கு அச்சம்

கூடாத இழிபிறவிகள். (இராணிப்பேட்டை புலவர் திரு. பி.மா. சோமசுந்தரனுர் உதவிய குறிப்பு) தொழும்பர் - இது அடிமைகளையும் இழிந்தோரையும் சுட்டும்.

உரைகொளேல் — அவர்களது உபதேசங்கள் அவர்களைப் போன்றே இழிந்தனவாகையால் அவற்றை ஏற்றுக்கொள்ளாதீர் என்பதாம்.

திருமருவும் பொய்கை சூழ்ந்த தேவன்குடி என்றது இவ்வாலயத்தைச் சுற்றி மூன்று புறங்களிலும் அமைந்திருந்த அகழி போன்ற நீர்நிலையைக் குறித்ததாகும்.

அருமருந்து — வேறு எதனுலும் தீர்க்கப்படாத பிறவி நோய்க்கு மருந்தாகலின் அருமருந்து எனப்பட்டது. இத்தலத்து அம்பிகையின் திருநாமத்தையும் குறிப்பாலுணர்த்தியது கண்டு கொள்க.

சேடர்தே வன்குடித் தேவர்தே வன்தனை
மாடம்ஓங் கும்பொழில் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன
பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

11. தேவர்கள் தொழுகின்ற திருந்துதேவன்குடியில் எழுந்தருளியிருக்கின்ற தேவதேவனுகிய சிவபிரானை, மாடங்களும் ஓங்கி வளரும் பொழில்களும் நிரம்பிய தண்மை மிக்க சீகாழிப்பதியில் தோன்றியவனும், அனைவராலும் விரும்பப்படும் தன்மையுள்ளவனுமான தமிழ் ஞானசம்பந்தன் பாடிய பத்துப்பாடல்களையும் போற்றித்துதிக்க வல்லவர்களுக்குப் பாவம் இல்லையாக ஆகிவிடும்.

சேடர் — பெருமையுடையவர்கள்; அறிஞர்கள் என்றும் கொள்ளலாம்.

இரண்டாவது அடியில் மாடம் மல்கு தண்காழியான் என்றும், ஓங்கும் பொழில் மல்கு தண்காழியான் என்றும் இரு வகையாகக் கூட்டிப் பொருள் கொள்க. இவ்வாறின்றி மாடங்களின் அளவுக்கு உயர்ந்து ஓங்கி வளரும் பொழில்கள் மிகுந்த தண்காழியான் என உரைத்தலுமாம்.

நாடவல்ல — நாடுதல் இங்கு விரும்புதல் என்ற பொருளில் வந்ததாகக் கொள்க. இதனைத் தமிழ் ஞானசம்பந்தனுக்கு அடைமொழியாகவோ அல்லது தமிழுக்கே அடைமொழியாகவோ கொள்க.

சுவாமி — கர்க்கடகேசுவரர், தேவதேவேசர்.
அம்பிகை- அருமருந்தம்மை.

---

## ஒதியம்பணை போல் விழும் ஊமர்கள்

பதிகம் பலபாடி நீடிய பிள்ளை பரசுதரற்(கு)
அதிகம் அணுக்கன் அமணர்க்குக் காலன் அவதரித்த
மதியம் தவழ்மாட மாளிகைக் காழிஎன் ருல்வணங்கார்
ஒதியம் பணைபோல் விழுவரந் தோசில ஊமர்களே.

—11-ம் திருமுறை, ஆளுடைய பிள்ளையார்
திருமும்மணிக்கோவை, 6ம் பாடல்

திருஞானசம்பந்தப் பிள்ளையார் இறைவர்மீது பல பதிகங்கள் பாடியவர். பரசு என்னும் மழுப்படையுடைய அவ்விறைவர்க்கு மிகவும் நெருக்கமானவர்; (மகன் முறை கொண்டவர்) சமணர்க்குக் காலன் போன்றவர். அவரவதரித்த சீகாழி என்றவுடன் அத்தலத்தையும், பிள்ளையாரையும் வணங்காதவர்களாகிய சில ஊமர்கள் ஒன்றுக்கும் பயனில்லாத ஒதிய மரத்துக் கிளைகள் வீழ்ந்து வீணுவது போல விழுந்து மரிப்பர், அந்தோ (பரிதாபம்).

சிவம்.

---

ல.

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருஇன்னம்பர்

பதிகவரலாறு:—திருந்துதேவன்குடித் தேவர்தேவெய்திய அருந்தவத்தோர் தொழும் அருமை வேடங்களைப் போற்றி அருந்தமிழ் பாடிய அளவில்ஞானத்தமுது உண்டவராகிய சிர புரச்செல்வர், மருங்குள்ள மைதிகழ் கண்டர்தம் கோயில் எல்லாம் வணங்கித் திருஇன்னம்பர் என்னுந்தலத்தை அடைந்தார். திருஇன்னம்பரில் நிலை பெற்று விளங்கும் பிரானை இறைஞ்சிப் பாடியருளிய இடைமடக்கான பன்னும் தமிழ்த் தொடை மாலை இதுவாகும். (திருமுக்கால் என்னும் யாப்பு பற்றி முன் த. மா. 6, 49-ம் பக்கத்தில் உரைத்தது இங்கும் கொள்க.)

பண்-சாதாரி] திருமுக்கால் [3-ம்திருமுறை

திருச்சிற்றம்பலம்

எண்டிசைக் கும்புகழ் இன்னம்பர் மேவிய
வண்டிசைக் குஞ்சடை யீரே
வண்டிசைக் குஞ்சடை யீருமை வாழ்த்துவார்
தொண்டிசைக் குந்தொழி லோரே. 1

பதிகப்பொழிப்புரை:—1. எட்டுத்திசைகளிலும் பரவிய புகழையுடைய திருஇன்னம்பர் என்னுமித்தலத்தில் விரும்பி எழுந்தருளியுள்ள, வண்டுகள் இசைபாடுகின்ற திருச்சடை முடியையுடைய பெருமானே! வண்டுகள் இசைபாடுகின்ற திருச்சடைமுடியையுடையவராகிய உம்மை வாழ்த்துபவர்கள் உமக்குத் தொண்டு செய்வதையே தம் தொழிலாகக்கொண்டவராவர். (இறைவனுக்குத் தொண்டு செய்வது தவிர வேறு தொழில் ஏதும் இல்லாதவர் என்பது கருத்து).

வண்டிசைக்கும் சடையீர்:—சடையில் சூடியிருக்கும் மலர்களைச் சுற்றி வண்டுகள் இசைபாடுகின்றன. மலர்களணிந்த திருச்சடையை உடையவர் என்பது இதனால் குறிப்பிடப் பட்டது.

தொண்டு இசைக்கும் தொழிலோர்:—தொண்டு இசைத்தலாவது அப்பரடிகளைப் போலத் தம்மை மனம், வாக்கு காயம் என்னும் முக்கரணங்களாலும் தொண்டு செய்யும் நெறியில் ஈடுபடுத்துதல். இசைத்தல்—பொருந்தப்பண்ணுதல். அப்பரடிகள் தம்மை முக்கரணங்களாலும் தொண்டு நெறியில் ஈடுபடுத்திக் கொண்டதைப் பின்வரும் பெரியபுராணத் திருப் பாடலால் அறிக.

மையல் துறை ஏறி மகிழ்ந்தலர்சீர்
வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்
விரவுஞ்சிவ சின்னம் விளங்கிடவே
எய்துற்ற தியானம் அருவுணர்வும்
ஈறின்றி எழும்திரு வாசகமும்
கையில்திக ழும்உழ வாரமுடன்
கைக்கொண்டு கலந்து கசிந்தனரே.

—திருநாவுக்கரசர் புராணம், 77ம் பாடல்.

[தியானம் அருவுணர்வு—மனத்தின் தொண்டு; எழுந்திரு வாசகம்—வாக்கின் தொண்டு; கையில் திகழும் உழவாரம்—மெய்யின் தொண்டு].

யாழ்நரம் பின்னிசை இன்னம்பர் மேவிய
தாழ்தரு சடைமுடி யீரே
தாழ்தரு சடைமுடி யீருமைச் சார்பவர்
ஆழ்துயர் அருவினை யிலரே. 2

2. யாழ் முதலிய நரம்புக் கருவிகளின் இனிய ஓசைகளையுடைய திருஇன்னம்பர் என்னுமித்தலத்தில் விரும்பி எழுந்

தருளிய நீண்ட சடைமுடியினையுடைய உம்மைப் பற்றுக் கோடாக அடைபவர் பெருந்துயரங்கள் நீங்கப் பெறுதலோடு அவற்றுக்குக் காரணமாகிய அரிய வினைகளும் இல்லாதவர்கள் ஆவர்.

ஆழ் துயர்:—பெருந்துயரம்; அருவினை—மற்ற எவ்வகையாலும் போக்குதற்கரிய தீவினைகள்.

இளமதி நுதலியொ டின்னம்பர் மேவிய
வளமதி வளர்சடை யீரே
வளமதி வளர்சடை யீருமை வாழ்த்துவார்
உளமதி மிகவுடை யோரே. 3

3. பிறைச்சந்திரனையொத்த நெற்றியையுடைய உமாதேவியாரோடு திருஇன்னம்பர் என்னுமித்தலத்தில் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள வளமுடைய சந்திரன் தங்குகின்ற திருச்சடைமுடியையுடையவராகிய உம்மை வாழ்த்துபவர்கள் நல்ல உள்ளமும் பேரறிவுமுடையவர்கள் ஆவர். (நல்ல மனமும் பேரறிவும் உடையவர்களே சிவபிரானை வாழ்த்தும் நல்லூழ் பெற்றவர்களாவர் என்பது பிள்ளையார் திருவுள்ளமாகக் கொள்க.)

வளமதி—வளமுடையமதி. சந்திரன் வளமுடையதாதல் எங்ஙனம் எனில் பயிர் பச்சைகளை வளர்த்தல், குளிர்ந்த நிலவொளியால் மக்கள் தாபத்தைப் போக்குதல் முதலியவைகளால் என்று கொள்க.

இடிகுரல் இசைமுரல் இன்னம்பர் மேவிய
கடிகமழ் சடைமுடி யீரே
கடிகமழ் சடைமுடி யீரும கழல்தொழும்
அடியவர் அருவினை யிலரே. 4

4. இடியின் முழக்கம் போலும் முழவம் முதலிய வாத்தியங்களின் ஓசைகளையுடைய திருஇன்னம்பர் என்னுமித்தலத்

தில் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள நறுமணங்கமழும் சடைமுடியையுடைய சிவபிரானே! நறுமணங்கமழும் சடைமுடியீராகிய உமது திருவடிகளைத் தொழுகின்ற அடியவர்கள் தம்மை வருத்தும் அரியவினைகள் இல்லாதவர்களாவர்.

இமையவர் தொழுதெழும் இன்னம்பர் மேவிய
உமையொரு கூறுடை யீரே
உமையொரு கூறுடை யீருமை உள்குவார்
அமைகில ராகிலர் அன்பே. 5

5. தேவர்கள் தொழுது வணங்குகின்ற திருஇன்னம்பர் என்னுமித்தலத்தை விரும்பி எழுந்தருளிய உமாதேவியாரை ஒரு பாகமாக உடைய சிவபிரானே! உமாதேவியாரை ஒரு பாகமாக உடையவராகிய உம்மைத் தியானிப்பவர்கள் உம்மிடம் பேரன்பு படைத்தவர்களாவர்.

அன்பு அமைகிலர்–அன்பு அமையமாட்டாதவர். ஆகிலர்-ஆகார். அன்பு அமையமாட்டாதவர் ஆகார் என்ற இரண்டு எதிர்மறைகள் அன்பு அமையப் பெற்றவர் என்ற ஓர் உடன்பாட்டை வலியுறுத்தியது கண்டு கொள்க. எனவே பேரன்பு படைத்தவர் ஆவர் என உரைத்தாம்.

எண்ணரும் புகழுடை இன்னம்பர் மேவிய
தண்ணருஞ் சடைமுடி யீரே
தண்ணருஞ் சடைமுடி யீருமைச் சார்பவர்
விண்ணவர் அடைவுடை யோரே. 6

6. எண்ணிப் பார்த்தற்குமரிய அளவற்ற புகழுடைய திருஇன்னம்பர் என்னும் இத்தலத்தில் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள குளிர்ச்சியுடைய அரிய சடைமுடியையுடைய சிவபெருமானே! குளிர்ச்சியுடைய அரிய சடைமுடியையுடைய உம்மைப் பற்றுக்கோடாகச் சார்பவர்கள் தேவர்களுக்குத் தாம் சார்பாகும் தன்மையையுடையவர்களாவர்.

தண்சடை, அருஞ்சடை என இருவகையாகவும் இயைத்துப் பொருள் கொள்க. தண்சடை—கங்கை, பாம்பு, சந்திரன் முதலியவைகளால் தண்மை பெற்ற சடை. அருஞ்சடை-மற்ற கடவுளர் எவர்க்கும் இத்தன்மையாகிய சடை இன்மையால் 'அருஞ்சடை' என்றார். ''நம: கபர்த்தினே ச''—சடைமுடியையுடைய இறைவனுக்கு வணக்கம் என்று வேதம் சிவபிரானைப் போற்றும். இப்பெயர் வேறு எக்கடவுளுக்கும் இல்லை என்பதறிக.

எழில்திக ழும்பொழில் இன்னம்பர் மேவிய
நிழல்திகழ் மேனியி னீரே
நிழல்திகழ் மேனியி னீருமை நினைபவர்
குழறிய கொடுவினை யிலரே. 7

7. அழகு திகழ்கின்ற பொழில்களையுடைய திருஇன்னம்பர் என்னுமித்தலத்தில் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் திருமேனியையுடைய சிவபிரானே! ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் திருமேனியையுடையவராகிய உம்மை நினைப்பவர்கள் (உயிர் போங்காலத்து உம் பெயரை நன்கு உச்சரிக்க இயலாது) குழறுகின்ற கொடிய வினை இல்லாதவர் ஆவர். (அதாவது குழறுது நன்கு உச்சரிப்பர் என்பதாம்).

அப்பரடிகளின் திருநாகைக்காரோணத் திருப்பதிகம், திருவிருத்தம், 3வது பாடலை இங்குச் சிந்தித்தல் தக்கதாம்.

திருச்சிற்றம்பலம்

தூமென் மலர்க்கணை கோத்துத்தீ
வேள்வி தொழிற்படுத்த
காமன் பொடிபடக் காய்ந்த
கடல்நாகைக் காரோணநின்
நாமம் பரவி நமச்சிவாய
என்னும் அஞ்செழுத்தும்
சாமன்று உரைக்கத் தருதிகண்
டாய் எங்கள் சங்கரனே.

திருச்சிற்றம்பலம்

எனவே நல்வினைப்பயன் உள்ளவர்களே சாகும்போது இறைவனுரது நல்ல நாமத்தைப் போற்றி உரைக்கும் பேறு பெறுவர். அல்லாதவர் குழறி ஏதேதோ பிதற்றி உயிர்விடுவர் என்பதாம்.

ஏத்தரும் புகழணி இன்னம்பர் மேவிய
தூர்த்தனைத் தொலைவுசெய் தீரே
தூர்த்தனைத் தொலைவுசெய் தீருமைத் தொழுபவர்
கூர்த்தநற் குணமுடை யோரே. 8

8. துதித்தற்கருமையான புகழுடைய திருஇன்னம்பர் என்ற இத்தலத்தில் எழுந்தருளிய, இராவணனது வலிமையை அழியச் செய்த, சிவபெருமானே! இராவணனது வலிமையை அழியச் செய்தவராகிய உம்மைத் தொழும் அடியவர்கள் மிகுந்த சத்துவகுணம் உடையோர் ஆவர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தில்லையம்பலக் கூத்தனைத் தரிசித்த செய்தியைக் கூறவந்த சேக்கிழார் பெருமான் "...குணமொரு மூன்றும் திருந்து சாத்துவிகமேயாக..." என்றருளிச் செய்ததை இங்கு நினைவு கூர்க.

இயலுளோர் தொழுதெழும் இன்னம்பர் மேவிய
அயனுமால் அறிவரி யீரே
அயனுமால் அறிவரி யீரும தடிதொழும்
இயலுளார் மறுபிறப் பிலரே. 9

9. நல்ல குணங்கள் உள்ளவர்கள் தொழுது வணங்குகின்ற திருஇன்னம்பர் என்னுமித்தலத்தில் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள, பிரமதேவனும் திருமாலும் அறிதற்கரிய பெருமானே! பிரமதேவனும் திருமாலும் அறிதற்கரிய பெருமானுகிய உமது திருவடிகளைத் தொழும் தன்மைஉள்ளவர்கள் மறுபிறப்பு இல்லாதவர் ஆவர். (திருவடிப்பேறு என்னும் வீட்டின்பம் பெறுவர் என்பதாம்.)

ஏரமர் பொழிலணி இன்னம்பர் மேவிய
தேரமண் சிதைவுசெய் தீரே
தேரமண் சிதைவுசெய் தீருமைச் சேர்பவர்
ஆர்துயர் அருவினை இலரே. 10

10. அழகு பொருந்திய பொழில்கள் சூழ்ந்த திரு-இன்னம்பர் என்னுமித்தலத்தை விரும்பி எழுந்தருளிய, பௌத்தர்களையும் சமணர்களையும் அழிவு செய்த பெருமானாகிய உம்மைச் சரணடைபவர்கள் பந்தப்படுத்தும் துயரமும் அதற்குக் காரணமான அருவினையும் இல்லாதவர்களாக ஆவர்.

ஆர்துயர்—பிறவியாகிய பெருந்துயர். அருவினை-பிறவிக்குக் காரணமான சஞ்சித ஆகாமிய வினைகள்.

ஏடமர் பொழிலணி இன்னம்பர் ஈசனை
நாடமர் ஞானசம் பந்தன்
நாடமர் ஞானசம் பந்தன நற்றமிழ்
பாடவல் லார்பழி யிலரே. 11

திருச்சிற்றம்பலம்.

11. மலர்கள் பொருந்திய பொழில்கள் அழகு செய்கின்ற திருஇன்னம்பர் என்னுமித்தலத்து எழுந்தருளிய சிவபிரானைத் தேசமெல்லாம் விரும்புகின்ற திருஞானசம்பந்தன் துதித்துப் பாடிய நன்மைபயக்கக் கூடிய இத்தமிழ்மாலையை அன்புடன் பாடவல்லவர்கள் பழி என்பது இல்லாதவர் ஆவர்.

சுவாமி—தான்தோன்றியீசர், எழுத்தறிந்தநாதர்.
தேவி—சௌந்தரநாயகி, பூங்கொம்புநாயகி.

சிவம்.

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# திருவடகுரங்காடுதுறை

பதிகவரலாறு:—திருஇன்னம்பர் மன்னும் சிவபிரானை இறைஞ்சி இடைமடக்கான பன்னும் தமிழ்த்தொடைமாலைப் பாடல் புனைந்து பரவிப் பொன்னங்கழலிணை போற்றிப் புறம் போந்த ஞானபோனகர் அங்கிருந்து புறப்பட்டுத் தடங்கரைப் பொன்னி வடகுரங்காடுதுறை வந்தணைந்தார். வடகுரங்காடு துறையில் வாலியார் வழிபட்ட முறைமையையும் சிறப்பித்துப் பாடியருளிய திருப்பதிகம் இதுவாகும்.

பண்—சாதாரி]  திருச்சிற்றம்பலம்  [3-ம் திருமுறை

கோங்கமே குரவமே கொழுமலர்ப் புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா திரிகளே விரவி எங்கும்
ஓங்குமா காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
வீங்குநீர்ச் சடைமுடி அடிகளார் இடமென விரும்பினரே. 1

பதிகப்பொழிப்புரை:—1. பெருக்கெடுத்து வந்த கங்கை நீரைத் தாங்கிய திருச்சடைமுடியை உடைய பெருமானாகிய சிவபிரான், கோங்கம் குரவம் செழுமையுடைய மலர்களை யுடைய புன்னை ஆகிய மரங்களும், கொகுடி என்ற முல்லைக் கொடியும், வேங்கை மரமும், ஞாழல் மரமும் பருத்து வளர்ந் துள்ள பாதிரி மரங்களும் ஆகியவை எங்கும் கலந்து உயர்ந் திருப்பதான காவிரியின் வடகரையைச் சார்ந்திருப்பதான திருவடகுரங்காடுதுறை என்ற தலத்தைத் தாம் உறைவதற் கான இடமாக விரும்பி எழுந்தருளியிருந்தார்.

காவிரியின் தென்கரையில் குரங்காடுதுறை என ஒரு தலம் இருப்பதால் இதனை வடகுரங்காடுதுறை எனப்பிரித்து காவிரி வடகரை அடை குரங்காடுதுறை என ஓதியருளினர்.

ஞாழல்-புலி நகக்கொன்றைமரம், குங்குமமரம் என்றுங் கூறுவர்.

மந்தமா யிழிமதக் களிற்றிள மருப்பொடு பொருப்பினல்ல
சந்தமா ரகிலொடு சாதியின் பலங்களுந் தகையமோதி
உந்துமா காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
எந்தையா ரிணையடி இமையவர் தொழுதெழு மியல்பினரே. 2

2. சிறிய அளவினதாகச் சொரியும் மதநீர் கூடிய இளங் களிறுகளின் தந்தங்களோடு, மலைகளில் வளரும் நல்ல சந்தனம் அகில் சாதி முதலிய பலன்தரும் மரங்களையும் தன்னில் விழும்படி மோதி அவைகளை அடித்துக்கொண்டு வரும் காவிரி நதியின் வடகரையைச் சார்ந்த திருவடகுரங்காடுதுறையில் எழுந்தருளிய எந்தையாகிய சிவபிரானுரது இரு திருவடிகளையும் தேவர்கள் தொழுது எழும் இயல்புடையராவர். (இயல்பு—தன்மை.)

முத்துமா மணியொடு முழைவளர் ஆரமும் முகந்துநுந்தி
எத்துமா காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
மத்தமா மலரொடு மதிபொதி சடைமுடி அடிகள்தம்மேல்
சித்தமா மடியவர் சிவகதி பெறுவது திண்ணமன்றே. 3

3. முத்து, அழகியமணி இவற்ரேடு மலைக்குகைகளின் அருகிலே வளரும் சந்தனமரங்களையும் வாரித்தள்ளி அடித்து வரும் அழகிய காவிரி நதியின் வடகரையைச் சார்ந்த திருவட குரங்காடுதுறையில் எழுந்தருளிய, பெருமை பொருந்திய பொன்னூமத்தம் மலரோடு சந்திரனையும் வைத்திருக்கும் தலைவராகிய சிவபிரானிடத்து சித்தத்தைவைத்த அடியவர்கள் சிவகதி பெறுவது திண்ணம் ஆகும்.

சித்தமாம் அடியவர்-சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார் புராணம் பார்க்க. (பெரியபுராணம் 4162—ம் திருப்பாடல்) சிவயோக சமாதியில் நிலைத்திருப்பதே சித்தத்தைச் சிவன்பால்

வைத்தல் என்பதாம். அத்தகையர் சிவகதி பெறுதலில் தினை யளவும் ஐயமில்லையாகலின் திண்ணம் அன்றே என்று தேற்ற மாகக் கூறியருளினர்.

கறியுமா மிளகொடு கதலியின் பலங்களுங் கலந்துநுந்தி
எறியுமா காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
மறியுலாங் கையினர் மலரடி தொழுதெழ மருவுமுள்ளக்
குறியினு ரவர்மிகக் கூடுவார் நீடுவா னுலகினூடே. 4

4. உறைப்புச் சுவையுடைய மிகுதியான மிளகுக் கொடி களோடு வாழையின் பழக்குலைகளையும் கலந்து தள்ளி மோதி கரையில் எறிகின்ற காவிரிநதியின் வடகரையைச் சார்ந்துள்ள திருவடகுரங்காடுதுறையில் எழுந்தருளியுள்ள மான்கன்று திகழுங் கரத்தினையுடையவராகிய சிவபிரானது மலரடிகளைத் தொழுதெழுதற்கு எண்ணும் உள்ளக்குறிப்புடையவர்கள் நிலைத்ததாகிய சிவலோகத்தில் என்றும் கூடிவாழ்வார்கள். (கூடிவாழ்தல் என்பது முன்பே ஸாலோகம் பெற்று அங்கிருக் கும் அடியார்களுடன் கலந்து வாழ்வர் என்பதாம்.)

கோடிடைச் சொரிந்ததே னதனொடுங் கொண்டல்வாய் விண்டமுந்நீர்
காடுடைப் பீலியும் கடறுடைப் பண்டமுங் கலந்துநுந்தி
ஓடுடைக் காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
பீடுடைச் சடைமுடி அடிகளார் இடமெனப் பேணினரே. 5

5. மரக்கிளைகளின் இடையே தேன் கூடுகளினின்றும் சொரிந்த தேனுடன் மேகங்கள் பொழிந்த முதல் பெய்த நீரானது, சோலைகளில் உள்ள மயிற்பீலிகளையும், காடுகளில் உள்ள மரங்கள் முதலியவைகளையும் கலந்து அடித்துக் கொண்டு ஓடிவருதலையுடைய காவிரி நதியின் வடகரையைச் சார்ந்த திருவடகுரங்காடுதுறை என்னுமித்தலத்தினைப் பெரு மையுடைய சடைமுடியடிகளாராகிய சிவபிரான் தனது உறை விடமாக விருப்பத்துடன் எழுந்தருளினர்.

முன்னீர்:—கார்காலத்தில் முதலில் பெய்த மழைநீர். ஓடுடைக் காவிரி-ஓடுதலையுடைய அதாவது ஓடிவருகின்ற காவிரி.

கோலமா மலரொடு தூபமுஞ் சாந்தமுங் கொண்டுபோற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினர் திருந்துமாங் கனிகளுந்தி
ஆலுமா காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
நீலமா மணிமிடற் றடிகளை நினையவல் வினைகள்வீடே. 6-7

6-7. நன்கு தேறிய மாங்கனிகளை அடித்துக் கொண்டு அசைந்து வருகின்ற காவிரி நதியின் வடகரையைச் சார்ந்த திருவடகுரங்காடுதுறையில் அழகிய மலர்களோடு தூபம் சந்தனம் முதலிய பூசனைப் பொருட்களைக் கொண்டு போற்றி வாலி என்ற வானரவரசன் வழிபடும்படி பொருந்தி இருந்தவராகிய அழகிய நீலமணிமிடற்றடிகளாகிய சிவபிரானை மனதால் நினைக்க எளிதில் நீங்காத கொடிய வினைகளும் நீங்கிப் போகும்.

இராமாயணத்தில் வரும் வாலி என்ற குரங்கு அரசன் வழிபட்டவரலாறு இப்பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. தலப் பெயர்க் காரணம் கூறியவாறு,

நீலமணிமிடறு:—இறைவர் உண்டருளியவிடம் நீலமணி போல் கழுத்தில் தங்கி அழகு செய்தது என்பது குறிப்பிட்டருளினர்.

நினைதல்:—ஸ்மரித்தல் அதாவது தியானித்தல், வீடு—விடுதலையாகும் என்ற பொருள் காட்டும் தொழிற் பெயர்.

நீலமா மணிநிறத் தரக்கனை இருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்
ஏலமோ டிலையில வங்கமே இஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை அடைகுரங் காடுதுறையே. 8

8. நீலமணி போன்ற நிறமுடைய இராவணனை அவனது இருபது கரங்களும் குழையும்படித் தனது வாலினுல் கட்டிய (வலிமையுடைய) வாலி என்ற வானரவரசன் வழிபடச் சேர்ந்த கோயில் (எதுவெனில்) ஏலமோடு பச்சிலைமரம், இலவங்கம், இஞ்சி, மஞ்சள் முதலியவற்றைத் தள்ளிக்கொண்டு அசைந்து வருகின்ற காவிரி நதியின் வடகரையைச் சார்ந்த திருவடகுரங்காடுதுறையாகும்.

இத்திருப்பாடலும் வாலி வழிபட்ட வரலாற்றைக் குறிப்பிடுகிறது.

பொருந்திறற் பெருங்கைமா வுரித்துமை யஞ்சவே யொருங்கு நோக்கிப்
பெருந்திறத் தனங்கனை யனங்கமா விழித்ததும் பெருமை போலும்
வருந்திறற் காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
அருந்திறத் திருவரை அல்லல்கண் டோங்கிய அடிகளரே. 9

9. வேகத்துடன் வருகின்ற காவிரிநதியின் வடகரையைச் சார்ந்த திருவடகுரங்காடுதுறையில் எருந்தருளியவரும், அரிய வலிமையையுடைய பிரமன் விட்டுணு என்ற இரு பெருங் கடவுளர்களும் துன்புறும்படிச் செய்து, அழல் தூணய் ஓங்கியவருமான சிவபிரானுக்கு உமாதேவியார் அஞ்சும்படி பொருந்திறத்து பெரிய துதிக்கையையுடைய கயாசுரன் என்னும் யானையின் தோலை உரித்ததும், பெருந்திறல் உடைய மன்மதனை உடம்பு இல்லாமல் எரிந்து போகும்படி ஒருங்கு நோக்கி விழித்ததும் ஒரு பெருமையோ? இல்லை என்றவாறு.

இப்பாடலின் கருத்து என்னவெனில் பிரமவிட்டுணுக்கள் இருவரும் சாமானியர் அல்லர். அவர்களும் வலிமை படைத்தவர்களே. அவர்களையே அடிமுடி காணுதவாறு துன்புறும்படிச்செய்த சிவபிரானுக்கு அவ்விருவரினும் எளியரான யானை வடிவசுரனையும் மன்மதனையும் முறையே உரித்ததும், எரியும்படி விழித்ததும் ஒரு சிறிய செயலேயன்றிப் பெரிய செயல்

அல்ல என்பதாம். இதனால் பிரமவிட்டுணுக்களை அல்லல் கண்டதே பெரிய செயல் என்பது பிள்ளையாரின் திருவுள்ளம் என்று அறிந்துகொள்க.

பொருந்திறல்:—போர் செய்யும் வலிமை; ஒருங்கு நோக்குதல்—பார்வையினை வேறு எங்கும் செலுத்தாது ஒரே முகமாகச் செலுத்துதல்.

கட்டமண் தேரருங் கடுக்கள்தின் கழுக்களுங் கசிவொன்றில்லாப்
பிட்டர்தம் மறவுரை கொள்ளலும் பெருவரைப் பண்டமுந்தி
எட்டுமா காவிரி வடகரை அடைகுரங் காடுதுறை
சிட்டனா ரடிதொழச் சிவகதி பெறுவது திண்ணமாமே. 10

10, உடற்கட்டுடைய சமணர் பௌத்தர் ஆகிய இவர்கள் கடுக்காய்களைத் தின்கின்றவர்களும் கழுகுகள் போன்றவர்களும் ஆவர். மன இரக்கம் ஒரு சிறிதும் இல்லாத விலக்கத்தக்க செயலுடையவர்கள். அத்தகையவர்களது அறவுரை என்ற பெயரால் கூறும் போலி உபதேசங்களைச் சிறிதும் கொள்ளாதீர்கள். பெரிய மலைகளில் உள்ள பொருள்களை அடித்துத் தள்ளிப் பாய்கின்ற காவிரி நதியின் வடகரையைச் சார்ந்த திருவடகுரங்காடுதுறையில் எழுந்தருளியுள்ள சிட்டனாராகிய சிவபிரானது திருவடிகளைத் தொழுதால் சிவகதி பெறுவது திண்ணம் ஆகும். (எனவே தொழுவீர்களாக என்று நெறிப்படுத்தியது கண்டுகொள்க.)

கட்டு—சமணர்களும் பவுத்தர்களும் நல்ல கட்டான உடல் உடையவர் என்பது தெரிய வருகிறது கடுக்கள் தின்பதால் உணவு எளிதில் சீரணமாக மேலும் மேலும் உணவு கொண்டு அதனால் பருத்த உடலுடையராவர் என்று கருதப்படுகிறது. கட்டு என்பதற்கு கட்டுப்பாடுடையவர் என்ற பொருளும் கூறப்படுகிறது. கழுக்கள்—கழுகுகள். கசிவு—உள்ளங்கசிதல், இரக்கம் கொள்ளுதல். கொல்லாமை என்ற போர்வையில் மறைந்து கொண்டு ஒரு சிறிதும் இரக்கம் இல்லாது அப்பரடிகளை நீற்றறையில் இடுவித்தும், நஞ்சூட்டியும், யானையை

ஏவியும், கல்லினோடு பிணைத்துக் கடலில் எறிந்தும் கொலை செய்யமுயன்ற செயல்கள் அனைத்துக்கும் காரணம் மனக்கசிவு இன்மையேயாகும். பிட்டர்—பிரஷ்டர் என்ற வட சொல்லின் திரிபு, விலக்கப்படவேண்டியவர் என்பது பொருள். அப்பரடிகளின் சந்திப்பு ஏற்பட்ட பிறகே திருஞானசம்பந்தர் இப்பதிகம் பாடியருளியது நினைவிற்கொள்க. கொள்ளல்உம்—கொள்ளன்மின் என்ற எதிர்மறைப் பொருள் தரும் பன்மை ஏவல் வினைமுற்றாகக் கொள்க. சிட்டன்-சிஷ்டன் என்ற வடமொழிச் சொல்லின் தமிழ்வடிவம். உயர்ந்தவன், நல்லவன், பரிசுத்த மானவன் இப்பொருள்களில் வந்தது.

தாழிளங் காவிரி வடகரை யடைகுரங் காடுதுறைப்
போழிள மதிபொதி புரிதரு சடைமுடிப் புண்ணியனைக்
காழியா னருமறை ஞானசம் பந்தன கருதுபாடல்
கோழையா அழைப்பினுங் கூடுவார் நீடுவா னுலகினூடே. 11

திருச்சிற்றம்பலம்

11. பள்ளத்தை நோக்கி ஓடுகின்ற இளமையுடைய காவிரி நதியின் வடகரையைச் சார்ந்த திருவடகுரங்காடுதுறையில் எழுந்தருளியுள்ள இளம்பிறைச்சந்திரனைத் தலையில் சூடிய புரிசடைமுடிப் புண்ணியனான சிவபிரானைச் சீகாழிப் பதியினனும் அரிய மறைகள் வல்லவனுமான ஞானசம்பந்தனது தியானம் செய்யத்தக்கவையான திருப்பாடல்களாகிய இவைகளால் கோழையுடன் கூடிய குரலோடு பாடினாலும் நிலைபெற்றதான சிவலோகத்தைச் சென்று அடைவர். சடைமுடிப்புண்ணியனைக்கருது ஞானசம்பந்தன பாடல் என்று இயைத்தும் பொருள் கொள்ளலாம்.

இளங்காவிரி:—வளமை குன்றாத காவிரி. கோழையா அழைப்பினும்—''கோழைமிடறாகக் கவிகோளுமிலவாக இசை கூடும் வகையால்'' எனவரும் திருவைகாவூர்ப் பதிகப் பகுதியையும் அதன் உரையையும் இங்கும் கொள்க. கூடுதல்—சென்று சேர்தல் என்ற பொருளில் வந்தது.

சுவாமி—குலைவணங்குநாதர்] [தேவி—அழகுசடைமுடியாள்.

சிவம்.

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருப்பழனம்

பதிகவரலாறு:—திருவடகுரங்காடுதுறையில் வாலியார் வழிபட்ட அருமையயமைத்துப் பாடிப் பரவி, இறைவனெழுந்தருளியுள்ள பிறதலங்களையும் வழிபட்டு, முத்தலைச் சூலப்படை கொண்ட பெருமானது திருப்பழனம் என்ற தலத்தையடைந்தார். அங்கு முக்கண் பரமேட்டியார் கோயிலுள்புக்கு, இறைஞ்சி நின்றேத்தி உருகிய சிந்தையராகிப் பாடிய விழைசொற்பதிகம் இதுவாகும்.

பண்-தக்கேசி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவருவார் புலியினுரிதோலார்
நாதாவெனவும் நக்காவெனவும் நம்பாவெனநின்று
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழனநகராரே. 1

பதிகப்பொழிப்புரை:—1. வேதங்களை ஓதிக்கொண்டு வெண்மையான பூணூலைத்தரித்து, வெள்ளை எருதின் மேல் ஏறிக் கொண்டு, பூதப்படைசூழப் பொலிவுடன் வருபவரும், உரித்த புலியின் தோலை உடுத்தவரும், நாதா எனவும் நக்கா எனவும் நம்பா எனவும் நின்று திருவடிகளைத் தொழுபவர்களது பாவத்தைத் தீர்ப்பவரும் திருப்பழன நகரில் எழுந்தருளியுள்ள சிவபிரானேயாவர்.

நாதன்—தலைவன், நாயகன். நக்கன்—ஆடையற்றவன், திகம்பரன். நக்னன் என்ற வடமொழிச்சொல்லின் திரிபு. நம்பன்—உயிர்களால் விரும்பப்படுபவன். நம்பப்படுபவன் எனினுமாம். பொலியவருதல்—விளக்கமாக வருதல். இங்குக் கண்ணுக்கினிய காட்சியாய் வருதலைக் குறித்தது.

கண்மேற்கண்ணுஞ் சடைமேற்பிறையும் உடையார்காலனைப்
புண்ணுறுதிரம் எதிராறோடப் பொன்றப்புறந்தாளால்
எண்ணாதுதைத்த எந்தைபெருமான் இமவான்மகளோடும்
பண்ணார்களிவண் டறைபூஞ்சோலைப் பழனநகராரே. 2

2. இரண்டு கண்களின் மேல் ஒரு நெற்றிக் கண்ணையும் திருச்சடையின் மேல் பிறைச்சந்திரனையுமுடையவரும், இயமனைப் புண்ணை வழியாகக் கொண்டு வெளிப்படும் இரத்தம் ஆறுபோல பெருக்கெடுத்தோடி இறக்கும்படி தமது திருப்பாதத்தால் அவனை ஒரு பொருட்டாக மதியாது உதைத்தவரும், இமவான் மகளோடும் கூடிய எந்தை பெருமானும், பண்கள் பொருந்த இசைபாடிக் களிக்கும் வண்டுகள் ஒலி செய்கின்ற திருப்பழனநகரில் கோயில் கொண்டருளிய சிவபெருமானவர்.

எண்ணாது உதைத்தல்:—இயமனுக்கு உயிர்களை அவற்றின் காலமறிந்து கவர்ந்து கொள்ளும் அதிகாரத்தைத் தாமே அளித்ததையும் எண்ணாது மார்க்கண்டேயர் பொருட்டாக உதைத்தார் எனக்கொள்ளலும் பொருந்தும்.

பிறையும்புனலுஞ் சடைமேலுடையார் பறைபோல்விழிகட்பேய்
உறையுமயானம் இடமாவுடையார் உலகர்தலைமகன்
அறையுமலர்கொண் டடியார்பரவி ஆடல்பாடல்செய்
பறையுஞ்சங்கும் பலியுமோவாப் பழனநகராரே. 3

3. பிறைச்சந்திரனையும் கங்காநதியையும் திருச்சடைமேல் உடையவரும், பறை போன்ற அகன்ற விழிகளையுடைய பேய்கள் வசிக்கும் மயானத்தைத் தமது உறைவிடமாக உடையவருமாகிய உலகர் தலைமகன், வண்டுகள் சூழ்ந்து ஒலிக்கின்ற மலர்களைக் கொண்டு அடியார்கள் துதித்து ஆடல் பாடல் செய்தலும் பறை சங்கு இவற்றின் ஒலியும் பூசைகளும் என்றும் ஓயாது நடக்கும் திருப்பழனநகரில் கோயில் கொண்டருளிய சிவபெருமானவர்.

உலகர்தலைமகன்:—எல்லாவுலகங்களிலுமுள்ள உயிர்களுக்குத் தலைவனாகிய பசுபதி.

உரமன்னுயர்கோட் டுலறுகூகை அலறுமயானத்தில்
இரவிற்பூதம் பாடவாடி எழிலாரலர்மேலைப்
பிரமன்தலையில் நறவமேற்ற பெம்மானெமையாளும்
பரமன்பகவன் பரமேச்சுவரன் பழனநகராரே. 4

4. வலிமை பொருந்திய உலர்ந்த மரக்கிளைகளில் வசிக்கும் கோட்டான்கள் அலறுகின்ற மயானத்தில் இரவு நேரத்தில் பூதகணங்கள் புடை சூழ்ந்து பாட ஆடல்புரிகின்றவரும், அழகு பொருந்திய தாமரைமலர்மேல் உள்ள பிரமதேவனது தலையோட்டில் பிச்சையெடுத்த பெருமானும், எம்மை ஆளாக் கொண்ட பரமன் பகவன் பரமேச்சுவரனும் திருப்பழனநகரில் கோயில் கொண்ட சிவபிரானாராவர்.

உரம்:—வலிமை; உலறுதல்-காய்தல், வற்றுதல்; கூகை— கோட்டான், காக்கைக்குப் பகையான ஒரு பறவையினம். இவற்றுக்குப் பகலில் கண் தெரியாது, நறவம்—தேன், இங்கு உணவு என்ற பொதுவான பொருளில் வந்தது. பரமன்-எல்லாவற்றுக்கும் மேலானவன்; பகவன்—'பகம்' என்ற சொல்லால் குறிக்கப்படும் ஆறு குணங்களையுடையவன். இவை (1) அவாவின்மை (2) ஈச்சுரத்தன்மை (3) கீர்த்தி (4) செல்வம் (5) ஞானம் (6) வீர்யம் என்பனவாம். பரமேச்சுவரன் - பரம ஈச்சுவரன், மேலானவற்றுக்கெல்லாம் மேலான கடவுள், முழுமுதல் கடவுள். பரமன், பகவன், பரமேச்சுவரன் என்ற இம் மூன்று சொற்களும் சிவபிரானையே குறிக்கும். மற்ற கடவுளர் விஷயத்தில் இச்சொற்களைப் பிரயோகித்தால் அது உபசாரம் எனப்படுமே தவிர உண்மையாகாது.

குலவெஞ்சிலையால் மதில்முன்றெரித்த கொல்லேறுடை
யண்ணல்
கலவமயிலுங் குயிலும்பயிலுங் கடல்போற்காவேரி
நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்டெதிருந்திப்
பலவின்கனிகள் திரைமுன்சேர்க்கும் பழனநகராரே. 5

5. பெருமைமிக்க மேருமலையை வில்லாகக் கொண்டு அதனால் மூன்று மதில்களையும் எரித்தவனும், கொல்லும் ஆற்றல் வாய்ந்த எருதினையுடைய அண்ணலுமாகிய சிவ பெருமான், தோகையையுடைய மயிலும் குயிலும் பயில்வதும் கடல் போல் பரந்த காவிரி நதியின் அலைகள் நலமும் அழகு முடைய நறிய மாங்கனிகளையும் பலாக்கனிகளையும் குதித்துச் செல்வது போல அலைத்து எதிர்உந்திச் சேர்க்கும் திருப்பழன நகரில் கோயில் கொண்டவராவர்.

நலமஞ்சுடைய—நலமும் மஞ்சும் உடைய என 'உம்'மை விரித்துப் பொருள் கொள்ளப்பட்டது. நலம்—நன்மை; மஞ்சு-அழகு. நறுமாங்கனிகளுக்கும் பலவின்கனிகளுக்கும் நல முடைமையாவது சுவையும் சத்துமுடைய உணவு ஆதலாகும். அழகாவது பழங்களின் நிறம், வடிவம் இவற்றால் உண்டாவது.

விளைக்குரலும் விளிசங்கொலியும் விழவின்னொலியோவா
மூளைத்தலைகொண் டடியாரேத்தப் பொடியாமதிளெய்தார்
ஈளைப்படுகில் இலையார்தெங்கிற் குலையார்வாழையின்
பாளைக்கமுகின் பழம்வீழ்சோலைப் பழனநகராரே. 6

6. திருக்கரத்தினில் பிரமகபாலத்தைக் கொண்டு இமை யவர்களாகிய அடியவர்கள் வழிபட மும்மதில்களையும் பொடி யாகுமாறு அம்பு எய்தவராகிய சிவபிரானார், பக்தர்கள் ஆனந்தமேலீட்டால் ஒருவரையொருவர் அழைக்கும் ஒலியும், மக்களையழைக்கும் சங்கின் ஒலியும் மற்றும் திருவிழாக்களின் ஒலியும் என்றும் ஓயாததும், ஈரமுள்ளஆற்றுப்படுகையில் இலைகள் நிறைந்த தென்னை, குலைகள் நிறைந்த வாழை, பாளைகள் விடுகின்ற கமுகு இவற்றின் முதிர்ந்த பழங்கள் விழு கின்ற வளமுடையதுமான சோலைகள் நிறைந்த திருப்பழன நகரில் கோயில் கொண்டருளியவராவார்.

விளைக்குரல் — மகிழ்ச்சியின் மிகுதி காரணமாக ஒருவரை யொருவர் அழைக்கும் சீழ்க்கை ஒலி. இது ஊதுகுழல் whistle) ஒலி போன்று ஒலிக்கும்.

மூளைத்தலை — மூளையோடு கூடிய பிரமன் தலை. இறைவர் ஏந்தியது சுடப்பட்ட மண்டை ஓடு ஆகாது, பிரமன் தலையைக் கை உகிரால் அரித்து அங்ஙனமே ஏந்தியது என்பதாம்.

ஈளைப்படுகு — ஈரம் உலராத சேறுடன் கூடிய ஆற்றுப் படுகை. (River bed)

பொய்யாமொழியார் முறையாலேத்திப் புகழ்வார்திருமேனி
செய்யார்கரிய மிடற்றார்வெண்ணூல் சேர்ந்தஅகலத்தார்
கையாடலினார் புனலால்மல்கு சடைமேற்பிறையோடும்
பையாடரவம் உடனேவைத்தார் பழனநகராரே. 7

7. பொய்யாமொழி எனப்படும் வேதங்களைப் பயிலுபவர்களால் வேதாகமங்களில் விதித்த முறைப்படி பூசித்துப் பொருள்சேர் புகழ்களைப் பாடும் பெருமை உடையவரும், சிவந்த திருமேனி-கரிய கழுத்து-வெண்மையான முப்புரிநூல் சேர்ந்த திருமார்பு இவற்றை உடையவரும், ஆடல்புரியும் திருக்கரத்தினை உடையவரும், கங்கையாற்றின் நீரால் நிறைந்த திருச்சடையின்மீது பிறைச்சந்திரனோடு படத்தையுடைய பாம்பையும் ஒருங்கே வைத்திருப்பவருமாகிய சிவபெருமானார் திருப்பழனநகரில் கோயில் கொண்டவராவார்.

பொய்யாமொழி:—வேதம். இறைவரது திரு முகங்களினின்றும் தோன்றியது. கையாடலினார்—கரங்களை வீசி ஆடுபவர். "சிக்கனவா வீசுகரம்" (உண்மை விளக்கம்—33), "எண்டோள் வீசி நின்றாடும் பிரான்" (அப்பர், திருஅங்கமாலை-2) முதலிய திருவாக்குகளால் இறைவர் திருக்கரங்களை வீசி ஆடுதல் பெறப்படும்.

பிறையோடும் பையாடரவம் உடனே வைத்தார் என்பது பகைகொண்ட பிறையும் பாம்பும் ஒருங்கே தங்கவைத்த சிறப்பினைக் குறித்தது. "பாம்பும் மதியும் புனலுந் தம்மிற் பகை தீர்த்து உடன் வைத்த பண்பாபோற்றி" என்ற அப்பரடிகளின் அருள் மொழி இங்கு கருத்திற் கொள்க. (திருவதிகை

வீரட்டானம் 6ம் திருமுறை, போற்றித் திருத்தாண்டகம், 4ம் பாடற் பகுதி)

மஞ்சோங்குயர முடையான்மலையை மாருயெடுத்தான்தோள்
அஞ்சோடஞ்சும் ஆறுநான்கும் அடரவூன்றினர்
நஞ்சார்சுடலைப் பொடிநீறணிந்த நம்பான்வம்பாரும்
பைந்தாமரைகள் கழனிசூழ்ந்த பழனநகராரே. 8

8. ஆகாயமளவு உயர்ந்ததும், இவ்வுலகனைத்தையும் உடைமைப் பொருளாகவுடைய இறைவருடையதுமான திருக் கயிலாய மலையை உள்ளம் வேறுபட்டுப் பெயர்த்தெடுக்க முனைந்த இராவணனது தோள்கள் இருபதும் நெருங்கி முரி யும்படி திருப்பாதத்தின் ஒரு விரலை ஊன்றியருளியவரும், இறந்தவர்கள் எரிக்கப்படும் சுடலையின் பொடியாகிய நீறு அணிந்தவரும், அனைவராலும் விரும்பப்படுபவரும், மணம் நிறைந்த பசிய தாமரைகள் நிறைந்த நஞ்செய் வயல்கள் சூழ்ந்த திருப்பழனநகரில் கோயில் கொண்ட சிவபிரானே யாவார்.

மஞ்சு:—மேகம், இங்கு அது சேர்தற்கு இடமாகிய ஆகாயத்தைக் குறித்தது. மஞ்சோங்கு உயரமலை, உடை யான்மலை என ஈரிடத்தும் கூட்டிப் பொருள் கொள்க. நஞ்சார்— நைந்தார், நைஞ்சார் எனவாகி நஞ்சார் என மரு வியதாகக் கொள்க. நைதல்—கெடுதல், அழிதல் என்ற பொருளில் வந்தது.

கடியார்கொன்றைச் சுரும்பின்மாலை கமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூ வடியாலுலக முழுதுந்தாவிய
நெடியான்நீள்தா மரைமேலயனும் நேடிக்காணாத
படியார்பொடியா டகலமுடையார் பழனநகராரே. 9

9. வண்டுகள் சூழ்ந்த கொன்றை மாலையின் மணம் கமழ்கின்ற பொன்னிறம் பொருந்திய திருச்சடையை உடைய வரும், விண்ணை முடிவாகக் கொண்ட மூவுலகையும் மூன்று அடிகளால் தாவியவனாகிய திருமாலும் நீள் தாமரை மேல்

இருக்கும் பிரமதேவனும் தேடிக்காணாத திருவுருவத்தினரும், திருநீறு அணிந்த திருமார்பினையுடையவரும், திருப்பழன நகரில் கோயில் கொண்டவராகிய சிவபிரானுவார்.

விண்முடியாப்படி:—விண்ணைமுடிவாகக் கொண்ட பாதாளம், மண்ணுலகம், விண்ணுலகம் என்ற மூவுலகம். நேடி—தேடி; காணாதபடியார்—காணாத திருவடிவுடையார். படி—வடிவம் என்ற பொருளில் வந்தது.

கண்டான்கழுவா முன்னேயோடிக் கலவைக்கஞ்சியை
உண்டாங்கவர்கள் உரைக்குஞ்சிறுசொல் லோரார்பாராட்ட
வண்டாமரையின் மலர்மேல்நறவ மதுவாய்மிகவுண்டு
பண்டான்கெழும வண்டியாழ்செய்யும் பழனநகராரே. 10

10. காலையில் தூங்கியெழுந்தவுடன் கண்ணைக் கூடக் கழுவாது கலந்த கஞ்சியைக் குடிப்பவர்களாகிய பௌத்தர்கள் கூறுகின்ற இழிந்த சொற்களை ஒரு பொருட்டாக ஏற்றுக் கொள்ளாத அடியார்கள் பாராட்டும் வண்ணம் இருப்பவர், வளமுடைய தாமரையின் மலர்மேல் தேனாகிய மதுவை வாய் நிறைய உண்டு பண்ணிசை பொருந்தும்படி வண்டுகள் யாழின் ஒலிபோல இன்னிசை பாடும் திருப்பழன நகரில் கோயில் கொண்டுள்ள சிவபிரானுவர்.

சிறுசொல்:—சிவபிரானை இகழ்ந்து புறச்சமயிகள் கூறும் சொற்கள். ஓரார்—இவ்விழி சொற்களை ஏற்றுக்கொள்ளாத அடியவர்கள்.

காலையில் எழுந்ததும் முகங்கூடக்கழுவாது கஞ்சிகுடிக்கும் புறச்சமயிகளின் இழி செயல் போன்றதே அவர் உரைக்கும் சிறு சொல் என்பது ''உண்டாங்கு அவர் உரைக்கும் சிறு சொல்'' என்ற பாடற் பகுதி குறிப்பிட்டுக் காட்டுகிறது. சிவன் அடியார்கள் இவற்றை ஏற்றுக் கொள்ளாது இறைவனை பாராட்டிப் பாடுவர் என்பதை தாமரையின் மலர்மேல் நறவ மதுவாய் மிகவுண்டு பண்டான் கெழும வண்டு யாழ் செய்யும் பழன நகர்'' என்ற பகுதி புலப்படுத்துகிறது.

வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணுபுரந்தன்னுள்
நாவுய்த்தனைய திறலான்மிக்க ஞானசம்பந்தன்
பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான்பழனத்தை
வாயிற்பொலிந்த மாலைபத்தும் வல்லார்நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்,

11. பேசுவதற்கு இனியவராகிய சிவபிரானது பொருள் சேர் புகழ் நிறைந்த பாடல்கள் பயிலுகின்ற திருப்பழனத்தைப் போற்றி, மூங்கிலில் தோன்றும் முத்துக்கள் ஓங்கி பொழில் களின் மணம் கமழ்தல் உடைய திருவேணுபுரம் என்னுமொரு பெயர் படைத்த சீகாழியில் தோன்றியவனும் நாவினால் படைக் கலத்தைச் செலுத்துவது போன்ற வல்லமையுடையவனுமான திருஞானசம்பந்தனது திருவாயினின்றும் தோன்றிய இத் தமிழ்மாலை பத்தும் வல்லவர் நல்லவராவர்.

பேசற்கினிய பெருமான்:—பெருமான் புகழ் பேசப்பேச இனிமைதரும் என்பதாம். பாடல் பயிலும் பழனம்-சிவபிரானது பொருள் சேர் புகழ்களைக் கொண்ட பாடல்களைப் பழனநகரில் உள்ளோர் கற்றும், கற்றவண்ணம் பாடியும் பயிலுகின்றனர் என்பதாம். பயிலுதல்—பழகுதல், சொல்லுதல், சேவித்தல், நிறைதல் என்பனவாதி பொருள்களைத் தரும் சொல்.

நாவுய்த்தனையதிறல்:— நாவினாலேயே படைக்கலத்தைச் செலுத்துவது போன்ற வல்லமை. இங்குப் படைக்கலமாவது திருப்பதிகம். அதைச் செலுத்துவது நாக்கு என்று கொள்க. பிள்ளையாரது திருவாக்கினின்றும் எழும் ஒவ்வொரு சொல்லும் படைக்கலம் போன்ற ஆற்றல் உடையதாம் என்பது கருத்து. ',ஆணை நமதே'' என்று அருளிய பாடல்களையும், திருக்கொள் ளம்பூதூரில் 'நாவலமே கோலாக' ஓடத்தின் மீது நின்று 'செல்லவுந்துக' என்று பாடி அதனை அக்கரை செலுத்தியது, அமணர் இட்ட தீயினை ''பையவே சென்று பாண்டியற்கு ஆகவே'' எனறு பணித்தது, திருவோத்தூரில் ''ஆண்பனை ஈன்

குலேழத்தூர்'' என்று பாடியருளியவளவில் ஆண்பனைகள் குலே தள்ளினவரலாறு, மற்றும் இவை போன்ற நிகழ்ச்சிகளை திருஞானசம்பந்தப் பெருமானரின் ''நாவுய்த்தனைய திறலுக் குச்'' சான்றுகளாகக் கொள்க.

வாயிற்பொலிந்த தமிழ்மாலை:—ஞானப்பால் உண்டருளிய பிள்ளையாரின் திருவாயினின்றும் சிறப்புடன் தோன்றிய தமிழ் மாலையாம் திருப்பாடல்கள். வல்லார் நல்லாரே—இப்பாடல்களை பாடவல்லவர்கள் நல்லனவெல்லாம் பெற்றுச் சிறப்புடன் வாழ் வார்கள் என்று பதிகப்பயன் குறிப்பிட்டருளியதாம்.

சுவாமி—ஆபத்ஸஹாயேச்வரர்] [தேவி—பெரியநாயகி.

---

## நிரந்தரம்போய் நெஞ்சே நினை

பழியொன்றும் பாராதே பாயிடுக்கிவாளா
கழியுஞ் சமணகையர் தம்மை—அழியத்
துரந்தரங்கச் செற்ருன் சுரும்பரற்றும் பாதம்
நிரந்தரம்போய் நெஞ்சே நினை.

—11-ம் திருமுறை, நம்பியாண்டார் நம்பி
அருளிய ஆளுடைய பிள்ளையார்
திருமும்மணிக்கோவை, 8ம்பாடல்

தமக்கு வரக்கடவதான எந்தப்பழியினையும் பாராது, பாயினை இடுக்கி, அதையே பெரிய தவமாகக் கருதி வாணாளை வீணாளாகக் கழிக்கும் கீழ்மக்களாகிய சமணர்களை அவர்கள் வருந்தும்படியும் அழியும்படியும் வாதப்போர் செய்தவனாகிய திருஞானசம்பந்தரது வண்டுகள் அரற்றும் திருப்பாதங்களை, நெஞ்சமே, நீ நிரந்தரம் போய் நினைப்பாயாக.

சிவம்.

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# திருவையாறு—1

பதிகவரலாறு:—திருப்பழனத்தில் முக்கட்பரமேட்டியாகிய சிவபிரானைத் தொழுது அங்கிருந்து திருஞானசம்பந்தர் திருவையாறு சென்றடையும் பொழுது திருவையாற்றில் வாழும் தொண்டர்கள் அனைவரும் "நாடுய்யப் புகலிவரு ஞானபோனகர் நண்ணினார்" என்று ஊர்முழுவதும் அலங்காரம் செய்து மிகுந்த மனக்களிப்பினோடும் எதிர்கொண்டு அழைத்தனர். தொண்டர்கள் உடன்வர, திருஞானசம்பந்தர் முத்துச்சிவிகையினின்றும் இறங்கி நந்தியெம்பெருமான் சிவபிரானிடத்து அருள் பெற்ற நன்னகராகிய ஐயாற்றை வணங்கி, " ஐந்து புலன் நிலைகலங்கும் இடத்து அஞ்சேல் என்பார்தம் ஐயாறு" என்று போற்றிசைத்த " புந்திநிறை செந்தமிழின் சந்த இசைத்" திருப்பதிகம் இதுவாகும்.

பண்-மேகராகக்குறிஞ்சி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்(று)
அருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவையாறே. 1

பதிகப்பொழிப்புரை:—ஐந்து புலன்களும் ஐம்பொறிகளில் பொருந்தாது கலக்கமுற்று நெறிமயங்கி அறிவு அழிந்து படவும், கபம் எனப்படும் கோழையானது மேலுக்கேறி நெஞ்சை யடைக்கவும், உயிரானது உடலை விட்டுப் பிரியும் சமயம் சுழன்று வருந்தவும் ஆகும் காலத்து, "அஞ்சேல்" என்று அவ்வுயிருக்கு அபயம் அளித்தருளுபவராகிய சிவபெருமான்

விருப்பத்துடன் எழுந்தருளியிருக்கும் கோயில், வலம் வந்த பெண்கள் நடனம் ஆட அதன் பொருட்டு வாசிக்கப்படும் மத்தளம் பேரொலி செய்ய (அதனைக் கேட்ட)சில மந்திகள் மழை வருகிறதோ என்று அஞ்சி மனங்கலங்கி மரங்களின் மீதேறி வானத்தை அண்ணாந்து மேகத்தைப் பார்க்கும் திருவையாறு ஆகும்.

ஐந்துபுலன்கள்—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவாம். ஐம்பொறிகள்—மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவாம். இவற்றுள் மெய் என்னும் உடல் ஊறு என்ற ஸ்பரிச உணர்ச்சியுடையது. வாய் சுவையையறியும். கண் ஒளியை அறியும். மூக்கு மணத்தினை உணரும், செவி ஓசையை அறியும். இவ்வைம்பொறிகளின் வாயிலாக நாம் மேற்கூறிய ஐம்புலன்களையும் நுகருகிறோம்.

இவை கலங்கி நெறிமயங்குதல்—உயிர் உடலை விட்டுப் புறப்படும் சமயம் ஐம் பொறிகளும் சிறிது சிறிதாகத் தம் ஆற்றலை இழத்தலால் ஐம்புலன்களையும் தெளிவாக உணராது கலக்கமடைய, உயிர் இதுகாறும் தான் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் நெறியினின்றும் விலகி நிற்கும் என்பதாம். எடுத்துக்காட்டாக இதுகாறும் உருவத்தைக் காட்டிய கண்கள் மரண சமயத்தில் எதிரில் யார் இருக்கிறார்கள் என்று பார்க்க இயலாது போகும். இங்ஙனமே பிற பொறிகளுக்கும் கொள்க.

அறிவு அழிந்திடுலாவது:—பொறிகள் கலங்கி மயங்கிடினும் சிறிது அறிவு எஞ்சியிருத்தலால் தன்னைச் சுற்றி ஏதோ நடைபெறுகிறது, யாரோ வருகிறார்கள் ஏதோ பேசுகிறார்கள் என்ற அளவில் உயிர் உணருகிறது. பிறகு அந்த அறிவும் அழிகிறது. அதாவது புத்தித்தடுமாற்றம், நினைவு பிசகுதல் போன்றவை ஏற்படுகின்றன.

ஐம்மேலுந்தி-என்பது பித்தம், வாதம், சிலேத்துமம் என்று சமமாக உடலில் இருக்கவேண்டிய மூன்றினுள் சிலேத்துமத்தின் விளைவாகிய கபம் எனப்படும் கோழையானது அதிகமாகி

மேலே வந்து நெஞ்சையடைக்கிறது என்பதாம். இதனுல் மூச்சுத் திணறல் ஏற்படுகிறது.

அலமருதல்—மரண சமயத்தில் உயிர் சுழன்று வருந்துதல். அஞ்சேல் என்று அருள் செய்வான்-இம்மாதிரியான மரணம் நிச்சயமாகிவிட்ட நிலையில் அந்த உயிரை இவ்வுலகத்திலுள்ள எவராலும் பாதுகாக்க இயலாது. சிவபெருமான் ஒருவரே அதற்குப் "பயப்படாதே" என்று அபயமளித்து அதனை நன் னெறியில் புகச்செய்து பிறப்பிறப்பில்லாத பேரின்பமாம் முத்தியை அருள் செய்வான் என்பதாம். அத்தகைய பெருமான் எழுந்தருளி இருக்கும் இடம் திருவையாறு என்று பிள்ளையார் உலகினர்க்கு அறிவுறுத்துகின்ருர்.

வலம் வந்த மடவார்கள்நடமாட—வலம் வருதல் என்பது கோயிலைச் சுற்றுதல். இது பிரதக்ஷிணம் எனப்படும். திருக்கோயில் பிராகாரம் முழுமையும் வலம் வந்த பிறகே இறைவர் எழுந்தருளியிருக்கும் மூலஸ்தானம் எனப்படும் திருக்கருவறை செல்லவேண்டும். இந்த மடவார்கள் வலம் வந்து பின்னர் இறைவர் சந்நிதியடைந்து அங்கு ஆடற்பணியினைச் செய்தனர். என்பது குறிப்பிடப்பட்டது. மடவார்கள் என்று பொதுவாகக் கூறியருளினுரேனும் இங்கு நடமாடியவர்கள் கோயிலில் இசை, ஆடல் பணி புரியும் உருத்திர கணிகையர் எனக் கொள்க.

முழவதிர மழையென்றஞ்சுதல்:—மழை பொழியும் போது மேகம் இடிக்கின்றது. அந்த இடியின் பேரொலி போல முழவுகள் மடவார்களின் நடனத்துக்குப் பக்கவாத்தியமாக இசைக்கப்பட்டன. இந்தப் பேரொலி கேட்ட மந்திகள் மேகத்தின் இடியோசை என மயங்கியறிந்து மழைவரும் போலும் என்று அஞ்சின என்பதாம்.

சில மந்தி அலமந்து:—மந்தி என்பது பெண் குரங்கினைக் குறிக்கும். பெண் குரங்குகள் குட்டிகளோடு இருக்குமாகையால் அவை மழைவருமோ என்று அஞ்சிப் பெரிதும் கலங்கின

என்பது குறிப்பிடப்பட்டது. பெண் குரங்கு என்ற பொருள் தரும் மந்தி எனக்கூறினுரேனும் பொதுவாகக் குரங்கினம் எனக் கொள்ளுதலும் தகும். என்னை? குரங்கினம் முழுமை யுமே மழைக்கு அஞ்சும் என்பதால் என்க.

மரமேறி முகில் பார்த்தல்:—மரங்களின் மீதேறி வானத்தை அண்ணுந்து பார்த்து மேகத்தின் நிலையை ஆராய்ந்து அறிதல். மேகம் கனமாக இருந்தால் நல்ல மழை தொடர்ந்து பொழி யும், அதற்குரிய பாதுகாப்பு தேட வேண்டும் என்பதாம். மழைக்கஞ்சிக் குட்டிகளுடன் கூடிய பெண் குரங்குகள் பாது காப்புத் தேடிய செய்தியைத் திருஞானசம்பந்தர். ''கழை மேவு மடமந்தி மழைகண்டு மகவினொடும் புகவொண் கல்லின், முழைமேவும்....''என்று திருமுதுகுன்றம் மேகராகக்குறிஞ்சிப் பண்ணில் அமைந்த தமது திருப்பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார் (நம் மூவர் தமிழ் மாலை 6, பக்கம் 61, 68 காண்க).

''புந்தி நிறை செந்தமிழின் சந்த இசை'' எனச் சேக்கிழார் பெருமானுல் சிறப்பிக்கப் பெற்ற இத்திருப்பதிகத்தில் முதலா வதாக அமைந்த இத்திருப்பாடலின் அருமைகருதிச் சிறிது விளக்கினேம். மேலும் இப்பாடலின் முதற் பகுதியில் திரு ஞானசம்பந்தப் பெருமான் மனிதனின் கடைசிக்கால நிலையை நம் கண் முன்னே நிறுத்திப் பிறர் எவராலும் காக்க முடியாத அந்த நிலையில் உயிருக்கு உற்ற துணை சிவபிரானே என்று உலகிற்கு உபதேசித்து அருளுகின்ருர். பிற்பகுதியில் குரங்கு கள் மழைக்கஞ்சி மரமேறிப் பார்க்கும் செயலைக் குறிப்பிடு கிருர். ஐயறிவுடைய மந்திகளும் மழைக்கஞ்சித் தமக்குப் பாதுகாப்புத் தேட முனையும்போது ஆறறிவுடைய மனிதன் தனக்கு மரணம் வருவது நிச்சயம் என்று அறிந்தும் தன்னு யிர்க்குப் பாதுகாப்பு தேடாது இருத்தல் தகுமோ? எனவே மரணத்தின் துன்பத்தைப் படம்பிடித்துக்காட்டி, அத்த சமயத் தில் இறைவரது அருளைத் தவிர வேறு பாதுகாப்பு இன்மை யால் அவ்வருளைத் தேடிக் கொள்ள மனிதன் நல்ல நிலையில் இருக்கும்போதே அதற்குரிய நெறியில் செல்ல வேண்டும்

என்று குறிப்பால் உணர்த்துவது போல இப் பாடலின் முற் பகுதிக்குப் பிறகு மந்திகளின் செயலை வைத்தது எனப் பொருத்தம் கண்டு கொள்க.

விடலேறு படநாக மரைக்கசைத்து
வெற்பரையன் பாவையொடும்
அடலேறொன் றதுவேறி அஞ்சொலீர்
பலியென்னும் அடிகள்கோயில்
கடலேறித் திரைமோதிக் காவிரியின்
உடன்வந்து கங்குல்வைகித்
திடலேறிச் சுரிசங்கஞ் செழுமுத்தங்(கு)
ஈன்றலைக்குந் திருவையாறே. 2

2. விடம் மேலே ஏறுதலையுடைய பாம்பினைத் தமது அரையில் கச்சாகக் கட்டி, மலையரசன் மகளான பார்வதி தேவியாரோடும் வலிமையுள்ள எருதின்மீதேறிக் கொண்டு, ''அழகிய சொற்களையுடைய பெண்களே, பிச்சையிடுங்கள்'' என்று கூறும் சிவபிரானாரது கோயில், வளைந்த மூக்கினையுடைய சங்குகள் கடலின் மேல் மிதந்து (மழைத்துளிகளைப் பெற்றுக் கருவுற்று) கடல் அலைகள் மோதிய வேகத்தால் தள்ளப்பட்டுக் காவிரியில் படிந்து வந்து, இரவு தங்கிப் பின்னர் கரையேறிச் செழுமையான முத்துக்களை ஈன்று அலைத்தலைச்செய்யும் திருவையாறு ஆகும்.

விடல்—நஞ்சு. விடலம் என்ற சொல் விடல் என வந்தது. அஞ்சொலீர்-சொற்களுக்கு அழகாவது இனிமை எனக்கொள்க. இங்குக் கூறப்பட்ட பெண்கள் தாருகவனத்து முனிவர்களின் பத்தினிகளாவர்.

கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்

கொங்காளப் பொழில்நுழைந்து கூர்வாயால்
இறகுலர்த்திக் கூதல்நீங்கிச்
செங்கால்நல் வெண்குருகு பைங்கானல்
இரைதேருந் திருவையாறே. 3

3. கங்காளர், கயிலாயமலையாளர், கானப்பேர் என்னும் தலத்தில் பேரரசு செலுத்துபவர், உமாதேவியாரை ஒரு பங்கிலே உடையவர், முத்தலைச் சூலத்தைப் படையாகக் கொண்டவர், எருதினைவாகனமாகக் கொண்டவர் என்றின்னோரன்ன பெருமைகளையுடைய சிவபிரானார் எழுந்தருளியிருக்கும் கோயில், தேன் நிறைந்த சோலையில் நுழைந்து சிவந்த காலையும் வெண்மையான நிறத்தையுமுடைய நாரையானது தனது கூர்மையான அலகினால் தனது சிறகைக் கோதி உலர்த்தி குளிரினின்றும் நீங்கிப் பசிய கடற்கரைச்சோலையில் இரை தேடுகின்ற திருவையாறு ஆகும்.

கங்காளர்:—தசைமுற்றிலுங் கழிந்த எலும்புக் கூடு கங்காளம் எனப்படும். அதைத் தரித்தவர் கங்காளர் எனப்பட்டார். சிவபிரான் கங்காளம் தரித்ததன் உண்மையைப் பின்வரும் திருவாசகப் பாடலால் தெளிக.

நங்காயி தென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமாகேள் காலாந்த ரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ.

—திருவாசகம், திருச்சாழல், 11

(இதன் பொருள்) பெண்ணே! இதுவும் ஒரு தவமோ? நரம்பு, ஆமையோடு எலும்பு இவற்றை அணிந்து, முழு எலும்புக்கூட்டைத் தோளின் மேல் சுமக்கின்றனனே! கங்காளம் தரிப்பதன் உண்மையைக் கூறுகின்றேன், கேட்பாயாக, பிரமன் திருமால் என்னும் இருவருக்கும் காலமுடிவினைச் செய்தருள்பவன் சிவபிரானேயாகும். அதன் அடையாளமே முழு எலும்புக்கூடு சுமத்தல் என்பதாம்.

கூதல் நீங்கி வெண்குருகு இரை தேரும் செய்தியால் மக்களும் திருவையாறு அடைந்து துன்பம் நீங்கித் தம் வாழ் நாளை இன்பமாகக் கழிக்கக் கடவர் என்று குறிப்பால் உணர்த் தியதாகக் கொள்க. வயலும் வயல் சேர்ந்த இடமாகிய மருத நிலத்தில், கானல் ஆகிய நெய்தல் நிலச்சோலையைக் குறிப் பிட்டது திணைமயக்கம் எனப்படும். கடலும் கடலைச்சார்ந்த இடமும் நெய்தலாகும்.

ஊன்பாயும் முடைதலைகொண் டூரின்
பலிக்குழல்வார் உமையாள்பங்கர்
தான்பாயும் விடையேறுஞ் சங்கரனுர்
தழலுருவர் தங்குங்கோயில்
மான்பாய வயலருகே மரமேறி
மந்திபாய் மடுக்கள்தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலருந் திருவையாறே. 4

4. தசை உலர்ந்து பரவிய முடைநாற்றமுடைய பிரம கபாலத்தைக் கையிலேந்தி ஊர்தோறும் பிச்சைக்கு உழல் பவரும், உமாதேவியாரை ஒரு பாகத்திலே உடையவரும், பாயும் விடையின் மீது ஏறும் சங்கரரும், தழல் உருவருமாகிய சிவபிரான் தங்கும் கோயில், மான்கள் பாய (அதனுல் அச்ச முற்ற) மந்திகள் வயலருகேயுள்ள மரங்களின் மேலேறி மடுக் கள் தோறும் பாய அதனுல் மரங்களில் உள்ள தேன் கூடுகள் உடைந்து தேன் அம்மடுக்களில் பாய, (நீர் கலங்குதலால்) மீன்கள் அருகேயுள்ள தாமரை மொட்டுக்களின் மேல் பாய அதனுல் அம்மொட்டுகள் மலர்கின்ற திருவையாறு ஆகும். (காரண காரிய நிகழ்ச்சிகளை ஒன்றன்பின்ஞென்ருக வைத்து பின்னிரண்டு அடிகளில் அழகியதொரு இயற்கைக் காட்சி கூறப்படுகிறது)

சங்கரன்—உயிர்களுக்கு இன்பத்தைச் செய்பவன். தழல் உருவர்—தீயின் வடிவானவர்: இறைவரது அட்ட மூர்த்தங் களுள் தீயும் ஒன்று.

நீரோடு கூவிளமும் நிலாமதியும்
வெள்ளெருக்கும் நிறைந்த கொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த
தத்துவனார் தங்குங்கோயில்
காரோடி விசும்பளந்து கடிநாறும்
பொழிலணைந்த கமழ்தார்வீதித்
தேரோடும் அரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலும் திருவையாறே. 5

5. கங்கை நீரோடு வில்வமும், நிலவினைப் பொழியும் சந்திரனும், வெள்ளெருக்கம்பூவும், கொன்றைப் பூமாலையும் அதனுடன் குளிர்ச்சியுடைய கரந்தை மலரும் திருச்சடையில் அழகாக அணிந்த மெய்ப்பொருளாகிய சிவபிரானார் தங்கும் திருக்கோயில், மேகமண்டலத்தை அளாவி ஆகாயத்தை அளந்த மணம் கமழும் பொழில்கள் சேர்ந்துள்ள, மலர் மாலைகளின் மணங்கமழும் தேர்கள் ஓடுகின்ற வீதியிலே உள்ள அரங்குகளில் மகளிர் நடனம் ஆடும் திருவையாறு ஆகும்.

கூவிளம்—வில்வம்; தத்துவம்—மெய்ப்பொருள்; கார்—மேகம்; சேயிழையார்—செம்மையான ஆபரணங்கள் அணிந்த பெண்கள்.

வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும்
நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனார் நண்ணுங்கோயில்
காந்தார மிசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார்வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. 6

6. தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் அரசனாகவும், நல்வழி காட்டும் திறமையானவனுமாகி, நறிய மணங்கமழும் கொன்றைப் பூமாலையைச் சடைக்கு அணிந்த புண்ணிய

மூர்த்தியாகிய சிவபெருமானுர் தங்கியிருக்கும் கோயில், காந்தாரப் பண்ணினையமைத்து மகளிர் இசைபாட அழகிய வீதியிலேயமைந்த அரங்கில் சில பெண்கள் ''தேம் தாம்'' என்ற ஒலி உண்டாகும்படி இசைக்கப்படுகின்ற வாத்தியங்களின் ஒலிக்கு ஏற்ப நடனம் ஆடுகின்ற திருவையாறு ஆகும்.

நடனமாடும் பெண்களின் கண்கள் புருவம் இவற்றின் அசைவை ''சேலோடச்சிலையாட'' என்று குறிப்பிட்டருளினுர். சேல் கண்ணுக்கும் சிலை புருவத்துக்கும் உவமை.

நின்றுலா நெடுவிசும்பில் நெருக்கிவரு
புரமூன்றும் நீள்வாயம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங்கோயில்
குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வார்சமல்கு
தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவையாறே. 7

7. நின்று உலாவும் நெடிய வானவீதியில் நெருங்கி வருகின்ற மூன்று புரங்களையும் நீண்ட கூர்மையானவாயுடைய அம்பு சென்று பாயும்படி வில்லை வளைத்த திருக்கயிலாய மலையுடைய சிவபிரானுர் சென்று அடையும் திருக்கோயில், குன்றுகளிலெல்லாம் குயில்கள் கூவத், தேன் மலர்களினின்றும் பாய்ந்து அதனுல் மணம்மிகுந்த தென்றல்காற்று அடிவருடச் செழுமையான கரும்பு கண்வளரும் திருவையாறு ஆகும்.

பின்னிரண்டடிகளில் ஒரு அழகிய இயற்கைக் காட்சி கூறப்படுகிறது. குயில்கள் பாடுகின்றன, தென்றல்காற்று இலேசாக கரும்பின் அடிப்பாகத்தைத் தடவுகின்றன. கரும்பு துயில்கிறது. இதை ஒரு தாய் பாடி தொட்டிலையாட்டக் காற்று குழந்தைமீதுவீச, அக்குழந்தை தூங்குகின்றதுபோலக் கூறியருளினுர். கரும்பு கண்வளர்தல் என்பது தென்றற் காற்று இலேசாகத்தாக்க கரும்பு அசைதலைக்குறித்தது. இனி,

கண்வளர்தல் என்பதற்குச் சிலேடையாகக் கரும்புகளின் கணுக்கள் முற்றிவளர்தலையும் குறிக்கும் என்பது சிவக்கவி மணி திரு சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் குறிப்புரை. இப்பொருளில் கண் என்பது கரும்புகளின் கணுக்களைக் குறிக்கும். பிரசம்—தேன். தென்றல் காற்று தேனின் மணத்தையும் கொண்டு செல்கிறது என்பதும் குறிப்பிடப்பட்டது. தென்றலார் "ஆர்" சிறப்புப்பன்மை விகுதி. அடிவருடல்—பாதங்களை இலேசாகத் தடவுதல். பாதங்களை வருடினால் துயில் விரைவில் வரும் என்று கூறப்படுகிறது.

அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
　　அரக்கர்கோன் தலைகள்பத்தும்
மஞ்சாடு தோள்நெரிய அடர்த்தவனுக்(கு)
　　அருள்புரிந்த மைந்தர் கோயில்
இஞ்சாயல் இளந்தெங்கின் பழம்வீழ
　　இளமேதி யிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
　　வயல்படியுந் திருவையாறே. 8

8. சிறிதும் அஞ்சாது திருக்கயிலாயமலையைப் பெயர்த்தெடுக்க முனைந்தவனாகிய இராவணனது பத்துத் தலைகளும் வலிமை நிறைந்த அவனது தோள்களும் நெரியும்படி அவனை ஒரு கால்விரலால் ஊன்றி நெருக்கிப் பின்னர் அவனுக்கு அருளும் புரிந்த இறைவரது கோயில், இனிய மரநிழலில் ஒரு இளம் தென்னைமரத்தின் முற்றின காய் வீழ, அதனால் அங்கு இருந்த ஒரு இளம் எருமைக் கன்று பயந்து ஓடி, வயல்களில் உள்ள செந்நெற்கதிர்களை மிதித்துச் சென்று தாமரை மலர்கள் பூத்திருக்கும் ஒரு வயலில் தங்கும் திருவையாறு ஆகும்.

தென்னம் பழம் என்பது தேங்காய் நெற்று, மரத்தினின்றும் அது தானே விழுந்தபோது மரநிழலில் தங்கியிருந்த எருமைக் கன்று பயந்தோடிச் செங்கமலம் பூத்த வயலில் பாது

காப்பாகத் தங்குகிறது. மனிதனுக்குத் துன்பங்களும் தாமாகவே வருகின்றன. அவற்றினின்றும் பாதுகாப்புப் பெற இறைவரது திருவடிக்கமலங்களைச் சரணாக அடைய வேண்டும் என்றும் இப்பாடலின் பின் இரண்டடிகளில் குறிப்புப் பொருள் காணலாம்.

மேலோடி விசும்பணவி வியன்நிலத்தை
 மிகவகழ்ந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனு மறியாத
 வகைநின்றான் மன்னுங்கோயில்
கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
 குவிமுலையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
 நடமாடுந் திருவையாறே. 9

9. அன்னப்பட்சியாகி மேலே பறந்து ஆகாயத்தை அணவித்தேடியும், அகன்ற நிலத்தை மிகவும் அகழ்ந்து சென்று மிக்குத் தேடியும் பிரமதேவனோடு திருமாலாகிய இவர்கள் அறியவொண்ணாதபடி அக்கினிப்பிழம்பாக நின்றவனாகிய சிவபிரான் நிலையாக எழுந்தருளியிருக்கும் கோயில், (நடனம் பயிற்றுவிக்கும் நட்டுவனாரின் கையில் உள்ள) சிறு தாளக்கோல் (இசைக்கு ஏற்றவாறு தாளமிட்டு) விரைவாக அசைய, (அவ்விசைக்கும் தாளத்திற்கும் ஏற்றவாறு) அழகிய திரண்ட வளையல்களையணிந்த இளம் பெண்கள் நடனம் ஆட, குவிந்து திரண்ட நகில்களையுடைய அப்பெண்களின் அழகிய முகத்தினின்று கயல் மீன்கள் போன்ற கண்கள் விரைவாக அசையவும், வில்போன்ற புருவம் அசையவும் அவர்கள் ஆட, மேலும் சிலபெண்கள் நடனமாடுதலைச்செய்கின்ற திருவையாறு ஆகும்.

குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு
 சாக்கியருங் குணமொன்றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே
 ஆளாமின் மேவித்தொண்டீர்

எண்டோளர் முக்கண்ணர் எம்மீசர்
இறைவர்இனி தமருங்கோயில்
செண்டாடு புனற்பொன்னிச் செழுமணிகள்
வந்தலைக்குந் திருவையாறே. 10

10. பருத்த உடலும் குறுகிய உடையும் கொண்ட சமணர்களோடு பௌத்தர்களும் ஆகியவர்கள் நற்குணங்கள் ஒன்றுமில்லாதவர்களும் முரட்டுத்தனமான வார்த்தைகளைப் பேசும் கொடியவர்களுமாவர். அத்தகையவர்களது வார்த்தைகளைக் கேளாது, தொண்டர்காள், எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையுமுடைய எமது ஈசராகிய இறைவர் இனிது அமருங்கோயிலாகிய, மலர்ச்செண்டுகளையடித்து வரும் காவிரி நதியின் நீர் செழுமையான நவமணிகளைக் கொண்டு வந்து அலைத்தல் செய்யும் திருவையாறு மேவி, அப்பெருமானுக்கே ஆட்படுங்கள். (புறச்சமயிகளது உரைகளைக் கேளாது திருவையாறு மேவிய எண்டோளரும் முக்கண்ணரும் ஆகிய ஈசனுக்கே ஆட்படுங்கள் என்று தொண்டர்களை நெறிப்படுத்தியருளியதாகக் கொள்க)

குண்டாடு சமணர்—குண்டு என்பதற்கு கீழ்மை என்ற பொருள் கொண்டு கீழ்மைக்குணம் நிறைந்த சமணர் என்றும் கொள்ளலாம். குற்றுடுக்கை—உடலை நன்கு மறைக்காது குறுகிய தடுக்காலாகிய உடை.

அன்னமலி பொழில்புடைசூழ் ஐயாற்றெம்
பெருமானை அந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையால் இவைபத்தும் இசையுங்கால்
ஈசனடி ஏத்துவார்கள்
தன்னிசையோ டமருலகில் தவநெறிசென்(று)
எய்துவார் தாழாதன்றே. 11

திருச்சிற்றம்பலம்

**11.** அன்னப்பட்சிகள் நிறைந்த பொழில்கள் புடை சூழ்ந்த திருவையாற்றைக் கோயிலாகக் கொண்ட சிவபெருமானே, அழகிய தண்மையுடைய சீகாழிப்பதியைச் சேர்ந்தவனும் நிலைத்த பெருமையுடைய வேதங்கள் ஓதும் நாவினை உடையவனுமான வளர்கின்ற புகழுடைய திருஞானசம்பந்தன் ஆக்கிய திருவருள் மருவிய பாடல்களாகிய இவை பத்தையும் கொண்டு இன்னிசையோடு கூடுமான காலங்களில் ஈசனது திருவடிகளைத் துதிப்பவர்கள் தமக்குரிய புகழோடு தவநெறியாகிய இந்நெறியால் சிறிதும் தாமதமின்றி தேவருலகு சென்று அடைவர்.

சிவம்.

---

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# திருவையாறு—2

பதிகவரலாறு:- "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐம்மேலுந்தி அலமந்தபோதாக அஞ்சேல் என்றருள் செய்வான் அமருங்கோயில்" எனத்திருவையாற்றையடைந்த போது பாடியருளிய திருஞானசம்பந்தர் நகரினுள் புக்குக் கோயிலையடைந்து, நீடு கோபுரத்தைத் தொழுது, உள்ளே புகுந்து, வலம் வந்து, தாழ்ந்து, அங்கு எம்பெருமான் திருமுன்பு பணிந்து வீழ்ந்து, எழுந்து, அன்பால் பரவிப்பாடியருளிய "கோடல் கோங்கம் கூவிளம்" என்னும் குலவு திருப்பதிகமாலை இதுவாகும். இப்பதிகம் பாடும் பொழுது இறைவரது திருப்பெருங்கூத்து நிறைந்த திருவுள்ளத்து நிலைமை தோன்ற "ஆடுமாறது வல்லான் ஐயாற்றெம் ஐயனே" என்று நின்று "பாடினார், ஆடினார், பண்பினொடும் கண்பொழிநீர்

பரந்து பாய'' எனச்சேக்கிழார் பெருமான் அருளிச்செய்துள் ளார். (திருஞானசம்பந்தர் புராணம்—303ம் பாடல்)

பண்—இந்தளம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

கோடல்கோங் கங்குளிர் கூவிள மாலை குலாயசீர்
ஒடுகங் கையொளி வெண்பிறை சூடும் ஒருவனார்
பாடல் வீணைமுழ வங்குழல் மொந்தைபண் ணாகவே
ஆடு மாறுவல் லானுமை யாறுடை ஐயனே. 1

பதிகப்பொழிப்புரை:-1. வெண்காந்தள், கோங்கு, வில்வம் இவற்றின் மாலைகளையும், அழகுடன் விளங்குவதும் ஓடுதலை யுடையதுமான கங்கைநதி, ஒளிதரும் வெண்மையான பிறைச் சந்திரன் ஆகியவற்றையும் சூடும் ஒப்பற்ற முழு முதல்வரும், இசைப்பாட்டு முழவம் மொந்தை புல்லாங்குழல் ஆகியவை இசைக்கப் பண்ணோடு பொருந்துமாறு ஆடுதலில் வல்லவரும் திருவையாற்றினை இருப்பிடமாகவுடைய ஐயனாகிய சிவபெரு மானேயாவர்.

குலாயசீர்:—சீர் என்னும் சொல்லுக்கு 'இரைச்சல்' என் றொரு பொருளும் காணப்படுதலால் இரைச்சலோடு விளங்கும் கங்கை நதி என்றும் கொள்ளலாம். நதி ஓடும் பொழுது இரைச்சல் (ஒலி) உண்டாகும் அல்லவா?

முழவம்:-மத்தளம் இது இருபுறத்திலும் கண் உடையது. மொந்தை—ஒரு பக்கம் மட்டும் கண்ணுடையது. இவை தோற் கருவிகள்.

பண்ணாக ஆடல்:—பண்ணோடு பொருந்த ஆடுதல். ஆடு மாறு வல்லான் என்றது இங்ஙனம் ஆடுதல் வேறெவர்க்கும் இயலாதது என்ற குறிப்பாகும். வல்லமை—எளிதாயியற்றுதல், விளையாட்டாகச் செய்தல் என்ற கருத்தில் வந்தது.
ஐயன்—தலைவன்,

தன்மை யாருமறி வாரிலை தாம்பிற ரெள்கவே
பின்னு முன்னுஞ்சில பேய்க்கணஞ் சூழத் திரிதர்வர்
துன்ன ஆடை உடுப்பர் சுடலைப்பொடி பூசுவர்
அன்னம் ஆலுந்துறை யானுமை யாறுடை ஐயனே. 2

2. பிறர் பரிகசிக்குமாறு (அல்லது இகழுமாறு) சில பேய்க்கணங்கள் முன்னும் பின்னும் சூழ்ந்துவரத் தாம் திரிவர். இணைக்கப்பட்ட கந்தையாடையை அணிவர். சுடுகாட்டுச் சாம்பலை உடலின் மேலே பூசுவர். இத்தகைய அவரது செயல்களைக் கொண்டு அவரது மெய்த்தன்மை இன்னதென்று அறியக்கூடாமையின் அவரது இயல்பை அறிபவர் எவருமில்லை. இத்தகைய பெருமானும் அன்னப்பட்சிகள் ஆடுகின்ற துறையானும் திருவையாற்றைக் கோயிலாகக் கொண்ட எம் ஐயனாகிய சிவபெருமானாவர்.

தன்மையாருமறிவாரிலை:— 'இயல்பறியப்படா' எனப்பின்னும் 6வது திருப்பாடலில் வருவதும் காண்க. மற்றும் பின்வரும் திருமுறை வாக்குகளையும் காண்க. "ஆயினும் பெரியர் ஆரறிவார் அவர் பெற்றியே (திருப்பாசுரம் 2ம் பாடற் பகுதி) "இன்னதன்மையன் என்றறிவொண்ணா எம்மானை..." (7-ம் திருமுறை 603-ம் பாடற்பகுதி), "தம்பெருமை தானறியாத் தன்மையன்" (திருவாசகம், திருச்சாழல், 19ம் பாடற்பகுதி) இன்னும் பலவுளவேனும் விரிவஞ்சி இத்துடன் நிறுத்திக்கொண்டு மஹாகவி காளிதாஸனின் குமாரஸம்பவ மஹா காவியத்தில் பார்வதி தேவியின் வாக்காக இக்கருத்து வருவதை மட்டும் ஈண்டுத் தருகின்றோம் "தான் செல்வமற்றவராயினும் வேண்டுபவர்க்கு வேண்டிய செல்வமளிப்பவர். சுடுகாட்டில் வசிப்பினும் மூவுலகுக்கும் அவர் தலைவர். பாம்பணி முதலியவற்றால் அச்சுறுத்தும் தோற்றம் உடையவராயினும் சாந்த ஸ்வரூபமுடையவர் என்ற பொருளுள்ள சிவ என்ற பெயர் பெற்றவர். அவரிடம் மாறுபட்ட குணங்களும் உள்ளன. அவரது இயல்பை உண்மையாக அறிந்தவர் யாருமில்லை" (குமாரசம்பவம், 5ம் ஸர்க்கம், 77ம் சுலோகம்)

துன்னவாடை:—இறைவர் துன்ன ஆடை அணிதலின் உண்மையைப் பின்வரும் திருவாசகப் பாடலால் அறிக.

"என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தானீசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ
மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ."
—திருவாசகம், திருச்சாழல்,. 2

(இதன் பொருள்) என் தந்தை, தலைவன், எல்லோருக்கும் ஆண்டவன். இத்தகைய பெருமான் கிழிந்த துணிகளைத் தைத்துக் கோவணமாகக் கொள்ளுவது எக்காரணம் பற்றி யோ? (இதுவினு) அக்கோவணம் உலகிடைக் காணும் ஸாமா னியக் கந்தையன்று. நிலைபெற்ற மெய்ந்நூற் பொருள்களையே துணியாகவும் நான்கு வேதங்களே சரடாகவும் இணைத்து அணிந்த கோவணம் எனக் கொள்க. (இது விடை).

கூறு பெண்ணுடை கோவண முண்பது வெண்டலை
மாறி லாருங்கொள் வாரிலை மார்பி லணிகலம்
ஏறும் ஏறித் திரிவர் இமையோர்தொழு தேத்தவே
ஆறும் நான்குஞ்சொன் னானுமை யாறுடை ஐயனே. 3

3. ஒரு பாகம் மலைமகளை உடையவர். உண்ணும் உணவு வெண்தலையில் எடுத்த பிச்சையுணவு. இவருடைய மார்பில் அணிந்து கொண்டிருக்கும் ஆமையோடு, பன்றியின் கொம்பு, பாம்பு, எலும்புமாலை முதலியவற்றைப் பண்ட மாற்றுச் செய்து கொள்வார் எவருமில்லை. தேவர்கள் துதித்து வணங்க ஒரு எருதின் மேல் ஏறிச்செல்வர். இத்தகைய பெரு மானும், ஆறு வேதாங்கங்களையும் நான்கு வேதங்களையும் அருளிச் செய்தவனும் திருவையாற்றினைக் கோயிலாகக் கொண்ட எம்தலைவராகிய சிவபெருமானேயாவர்.

பண்ணி னல்லமொழி யார்பவ ளத்துவர் வாயினர்
எண்ணி னல்லகுணத் தாரிணை வேல்வென்ற கண்ணினர்
வண்ணம் பாடிவலி பாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுகந் தானுமை யாறுடை ஐயனே. 4

4. பண்ணின் இசையினும் இனியமொழிகளை உடைய வர்களும், பவளம் போன்ற சிவந்த உதடுகளை உடைய வாயினையுடையவர்களும், கணக்கில்லாத நல்ல குணங்களை யுடையவர்களும், வேலின் கூர்மையையும் வென்ற கூர்மை யான இரண்டு கண்களையுடையவர்களுமான இளம் மகளிர், இறைவருடைய குணங்களையும் அவரது ஆற்றலையும் போற்றிப்பாடி தம் வாய்மொழியான நல்ல தோத்திரங்களை யும்பாட அவற்றைக் கேட்டு மகிழ்ந்தவனும் அண்ணலும் திரு வையாற்றினைக் கோயிலாகக் கொண்ட தலைவனுகிய எம் சிவ பிரானேயாவர்.

''அருச்சனை பாட்டேயாகும்'' என்றபடி இளம் மகளிர் பக்தியுடன் பாடவே அவற்றை அண்ணல் கேட்டு மகிழ்ச்சி யடைகின்றூர் என்பதாம்.

வண்ணம்—இயல்பு, குணம், வடிவு, அழகு, எனவே இறை வருக்குரியதான இவைகளையெல்லாம் மகளிர் போற்றிப் பாடு கிருர்கள் என்பதாம்.

வலி—இறைவரது ஆற்றலால் விளைந்த வீரச்செயல்கள் என்று கொள்க. வாய்மொழி — வாயினுல் மொழியப்படும் தோத்திரங்கள்.

வேன லானை வெருவவுரி போர்த்துமை யஞ்சவே
வானை யூடறுக் கும்மதி சூடிய மைந்தனுர்
தேனெய் பால்தயிர் தெங்கிள நீர்கரும் பின்தெளி
ஆனஞ் சாடும் முடியானுமை யாறுடை ஐயனே. 5

5. கொடியயானையுருவினனை கஜாஸுரன் அஞ்சும்படி யாக அவனது தோலை உரித்து உமாதேவியாரும் அஞ்சும்படி யாகத் தம் உடலின்மீது போர்த்திக் கொண்டவரும், விண்ணை ஊடுருவிச் செல்லும் பிறைச்சந்திரனை அணிந்தவருமான வீர ரும், தேன்-நெய்-பால்-தயிர்-இளநீர்-தெளிந்த கரும்புச்சாறு- ஆனைந்து இவற்றுல் அபிஷேகங் கொள்ளும் திருமுடியை

யுடையவரும் திருவையாற்றினைக் கோயிலாகக் கொண்ட ஐயனாகிய சிவபிரானேயாவர்.

ஆனஞ்சு—ஆனைந்து, பஞ்சகவ்யம். இவை பற்றி முன் உரைத்தவை கண்டு கொள்க.

எங்கு மாகி நின்றானு மியல்பறி யப்படா
மங்கை பாகங்கொண் டானு மதிசூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு நான்குக் குணர்வுமாய்
அங்கம் ஆறுஞ்சொன் னானுமை யாறுடை ஐயனே. 6

6. எங்கும் நிறைந்த பெருமானாய் நின்றவரும், இன்ன தன்மையன் என்று அறியப்படாதவரும், உமாதேவியாரை ஒரு பாகத்தில் கொண்டவரும், பிறைச்சந்திரனைத் தலையில் சூடும் வீரரும், நான்கு வேதங்களின் மெய்ப்பொருளை அறிதற்குக் கருவியாய் தாழ்வு அல்லது குற்றமில்லாத பதினெட்டு புராணங்களோடு ஆறு வேதாங்கங்களையும் அருளிச்செய்தவரும் திருவையாற்றினைக் கோயிலாகவுடைய ஐயனாகிய சிவபிரானவர்.

'இயல்பறியப்படா' என்பதை மங்கைக்கும் அடைமொழியாக்கி உரைப்பினும் அமையும். இறைவனைப் போலவே இறைவியின் தன்மையும் அறியப்படாதது ஆகும்.

மதிசூடும் மைந்தன் — மைந்தன் என்ற சொல் வீரன் என்ற பொருளில் வந்ததாகக் கொள்க. என்னை? தக்ஷன் சாபத்தினால் இளைத்து ஒரே கலையாகிய சந்திரனைக் காக்கும் ஆற்றல் பிரமவிட்டுணுக்களாதி தேவர்கள் எவர்க்கும் இல்லாது போகச் சிவபிரானே சந்திரனுக்கு அடைக்கலமளித்து அவன் முற்றிலும் அழிந்து போகாதவாறு வளரவும் தேயவும் அருள் செய்தார் என்று கந்தபுராணம் தட்சகாண்டம் கூறும் வரலாற்றால் எனக் கொள்க.

பின்னிரண்டடிகளை "நான்குக்குணர்வுமாய் பங்கமில் பதினெட்டொடு அங்கமாறுஞ் சொன்னானும் ஐயாறுடைய

ஐயனே'' என்று மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. வேதங்களின் மறைவான நுண்மையான பொருளை விரித்துக் கூற வந்தனவே புராணங்கள் ஆகும். புராணமும் அறிந்தவர்களே வேதங்களின் உட்கருத்தை நன்கு விளக்கவல்லவராவர். ஆறு அங்கங்களும் வேதங்களின் பொருளை ஐயம் திரிபற அறிதற்குக் கருவியாக அமைந்தனவேயாகும். எனவே இங்ஙனம் கூறினர். உணர்வு—அறிவு, இங்கு அறிவினைப் பெறுதற்குரிய கருவி என்ற பொருளில் வந்தது.

ஓதி யாருமறி வாரிலை ஓதி உலகெலாம்
சோதி யாய்நிறைந் தான்சுடர்ச் சோதியுள் சோதியான்
வேதி யாகிவிண் ணாகிமண் ணோடெரி காற்றுமாய்
ஆதி யாகிநின் றானுமை யாறுடை ஐயனே. 7

7. இறைவனுடைய முழுமையான தன்மையை வேதாகமாதி நூல்களை ஓதி அதனால் மட்டும் அறிபவர்கள் எவருமில்லை. அப்பெருமான் வேதங்களை அருளிச்செய்தவன் அல்லது ஓதினவன். இவ்வுலகனைத்திலும் சோதியாய் நிறைந்தவன். ஒளியளிக்கும் சூரியன் சந்திரன் அக்னி என்ற முச்சுடர்களினுள்ளும் ஒளியாக விளங்குபவன். வேதங்களையுடையவனாகியும், விண் - மண் - எரி - காற்று - உபலட்சணமாக நீர் என்ற ஐம்பெரும் பூதங்களாகி இவ்வுலகனைத்தையும் தோற்றுவித்த ஆதி முதல்வனாகி நின்றவனும் திருவையாற்றினைக் கோயிலாகக் கொண்டருளிய ஐயனாகிய சிவபிரானேயாவார்.

உலகெலாம் சோதியாய் நிறைந்தான்:—இறைவரதுசொரூப இலட்சணம். ''அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்ததெது...'' என்ற தாயுமானவர் பாடற்பகுதியும் காண்க. சுடர்ச் சோதியுட் சோதியான்—சுடரையுடைய சோதிகளாகிய சூரிய சந்திராக்னிக்குள் சோதியாய் உறைபவன் என்பதாம். ''அருக்கனில் சோதியமைத்தோன்...'' என்பனவாதி திருவாசகம் திருவண்டப்பகுதி 20 - 22 அடிகளும் காண்க.

குரவ நாண்மலர் கொண்டடி யார்வழி பாடுசெய்
விரவு நீறணி வார்சில தொண்டர் வியப்பவே
பரவி நாடொறும் பாடநம் பாவம் பறைதலால்
அரவ மார்த்துகந் தானுமை யயாறுடை ஐயனே 8

8. குராமரத்தின் புதிய மலர்களைக்கொண்டு வழிபாடு செய்கின்ற அடியார்களும், உடலெல்லாம் விரவுமாறு திரு நீற்றினைப் பூசுபவர்களாகிய சில தொண்டர்களும் இறை வரைப் புகழ்ந்து பாட, நாமும் அவ்விறைவரை நாள்தோறும் துதித்துப் பாடுதலினால் நமது பாவங்கள் நீங்கிப் போகும். அத்தகைய பெருமானும் பாம்பினைக் கச்சாகக் கட்டி மகிழ்ந்த வனும் திருவையாற்றினைக் கோயிலாகக் கொண்ட ஐயனாகிய சிவபெருமானேயாவர்.

''யானும் சகத்தில் திருநீறு இடுவார்தமைக் கண்டே இடுவேன்'' என்று சிறுத்தொண்டர் பைரவரிடம் கூறியது இங்கு கருதற்குரியது (பெரியபுராணம், சிறுத்தொண்டர் புராணம் - 77ம் பாடல் பகுதி) அதுபோல வழிபாடுசெய் அடியார்களும் விரவு நீறணிவார் சில தொண்டர்களும் இறைவரது திருவருட் செயல்களை வியந்து பாடுவது கண்டு நாமும் அங்ஙனமே பாட நம் பாவம் நீங்கும் என்று அருளிச்செய்ததாகக் கொள்க.

உரைசெய் தொல்வழி செய்தறி யாவிலங் கைக்குமன்
வரைசெய் தோளடர்த் துமதி சூடிய மைந்தனூர்
கரைசெய் காவிரி யின்வட பாலது காதலான்
அரைசெய் மேகலை யானுமை யாறுடை ஐயனே. 9

9. வேதங்களும் ஆகமங்களும் உரை செய்கின்ற ஞான நெறியில் செல்லுதலையறியாது உலகத்துக்குத் தன் வலிமையினால் துன்பத்தையே செய்து வந்த இலங்கை மன்னனாகிய இராவணனது மலைகளைப் போன்ற தோள்களை (அவன் கயிலாய மலையைப் பெயர்த்தெடுக்கமுயன்ற போது) நெருக்கிய (அவன் வலிமையையொழித்த) சந்திரசேகரனாகிய பெருமானும்,

காவிரி நதியின் வடகரையில் கோயில் கொள்வதில் விருப்ப முள்ளவனும், அரையிலே மேகலையென்றும் ஆபரணத்தை யணிந்தவனும் திருவையாற்றைக் கோயிலாகக் கொண்டருளிய ஐயனாகிய சிவபிரானேயாவர்.

மாலுஞ் சோதி மலரானு மறிகிலா வாய்மையான்
காலங் காம்பு வயிரங் கடிகையன் பொற்கழல்
கோல மாய்க்கொழுந் தீன்று பவளந் திரண்டதோர்
ஆல நீழலு ளானுமை யாறுடை ஐயனே. 10

10. திருமாலும் தாமரைமலரானாகிய பிரமதேவனும் அறிகிலாத மெய்ப்பொருளானவனும், அழகிய மலர்க்காம்பு கள் போன்ற கழல்களணிந்த அழகிய திருவடிகளையும் வயிர மணிகள் அழுத்தப்பட்ட யோகபட்டம் (துண்டு) கூடிய கோலத்தோடு, கொழுந்துகளை ஈன்று பவளம் போன்ற செந் நிறப் பழங்கள் திரண்டதான ஓர் ஆலமரநிழலில், தட்சிணா மூர்த்தியாய் உறைவானும் திருவையாறு கோயில் கொண்ட சிவபிரானேயாவர்.

இரண்டாவது அடியை ஆலமரத்துக்கு அடையாக்கி ஆல மரம் இறைவரது பொற்கழல் போலப் பொன்மையும் மென் மையும் ஒளியும் அழகும் உடைய கோலமாய்க் கொழுந்தீன்று என்று உரைத்தார் திருத்தருமையாதீனக் குறிப்புரையா சிரியர்.

கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையால்
மெய்யைப் போர்த்துழல் வாரு முரைப்பன மெய்யல
மைகொள் கண்டத்தெண் தோள்முக்க ணான்கழல் வாழ்த்தவே
ஐயந் தேர்ந்தளிப் பானுமை யாறுடை ஐயனே. 11

11. கையினிலே உணவை ஏற்று உண்டு திரிபவர் களாகிய சமணர்களும், கெட்டநாற்றம் வீசும் பழுப்புநிற மேறிய ஆடையால் உடம்பை முழுவதும் போர்த்திக்

கொள்ளும் பௌத்தர்களும் உரைக்கும் வார்த்தைகள் உண்மையானவை அல்ல. நீலகண்டத்தையும் மூன்று கண்களையும், எட்டுத் தோள்களையுமுடைய சிவபிரானது திருவடிகளை வாழ்த்த, ஐயந்தேர்பவனும் அருள்புரிபவனுமாகிய அப்பெருமானும் திருவையாறு கோயிலாகக் கொண்ட ஐயனாகிய சிவபிரானேயாவர்.

ஐயந்தேர்ந்தளிப்பான்—அடியார்கள் பால் ஆணவாதி மும்மலமாகிய ஐயம் பெற்று ஞானத்தை அளிப்பவன் என்பதாம்.

பலிதி ரிந்துழல் பண்டங்கன் மேயவை யாற்றினை
கலிக டிந்தகை யான்கடற் காழியர் காவலன்
ஒலிகொள் சம்பந்தன் ஒண்டமிழ் பத்தும்வல் லார்கள்போய்
மலிகொள் விண்ணிடை மன்னிய சீர்பெறு வார்களே. 12

திருச்சிற்றம்பலம்

12. பிச்சையேற்றலையுடையவனும் பாண்டரங்கம் என்னும் திருக்கூத்தாடுபவனுமாகிய சிவபிரான் விரும்பி எழுந்தருளியுள்ள திருவையாற்றை, அடியவர்களது துன்பத்தைக் கடிந்த திருக்கரங்களையுடையவனும், கடற்கரைக்கு அணிமையில் உள்ள சீகாழி மக்களின் பாதுகாவலனும், இசைத்தமிழ் தன்பால் நிறைந்துள்ளவனுமாகிய திருஞானசம்பந்தன் துதித்துப் பாடிய ஞானஒளிமிக்க இத்தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் பாடவல்லவர்கள் வளம் நிறைந்த சிவலோகம் சென்று நிலைத்த புகழ் பெறுவார்கள்.

சுவாமி—செம்பொற்சோதிநாதர், ஐயாறப்பர், பஞ்சநதேசுவரர், பிரணதார்த்திஹரர்.

தேவி — அறம்வளர்த்தநாயகி (தர்மஸம்வர்த்தனி)

சிவம்

Elango Achukoodam, 166, R. H. Road, Ms-4. Tel : 74121